# ஹிந்த் ஸ்வராஜ் - இந்திய சுயராஜ்யம்

## தோற்றுவாயும் உள்ளடக்கக் கூறுகளும்



ஆர்.பட்டாபிராமன்



# ஹிந்த் ஸ்வராஜ் - இந்திய சுயராஜ்யம் - தோற்றுவாயும் உள்ளடக்கக் கூறுகளும்

ஹிந்த் ஸ்வராஜ் - இந்திய சுயராஜ்யம் - தோற்றுவாயும் உள்ளடக்கக் கூறுகளும்

ஆர்.பட்டாபிராமன்

pattabieight@gmail.com

மின்னூல் வெளியீடு : FreeTamilEbooks.com



அட்டைப்படம் - லெனின் குருசாமி - guruleninn@gmail.com

# முன்னீடு

அக்டோபர் 2, 2024 காந்தி ஜெயந்தி நிகழ்வுகளில் ஒன்றாக ’ இந்திய சுயராஜ்யம்’ குறித்த உரை ஒன்றை வழங்க காந்தி கல்வி நிலைய நண்பர்கள் வாய்ப்பு தந்தனர். பலவேறு காந்திய அமைப்புகள் உடன் நின்றன.

காந்திய அன்பர் திரு மோகன் அவர்கள் தலைமையில் அவ்வுரை நிகழ்த்தப்பட்டது. திரு சரவணன் அவர்கள் (திரு அண்ணாமலை உள்ளிட்ட பெரியோர்களை கலந்துபேசி) இப்பணியை எனக்கு இட்டிருந்தார். முன்னரே ‘ஹிந்த் ஸ்வராஜ்’ படித்த நேரங்களில் சிறு கட்டுரைகள் எழுதியிருந்தது நினைவில் இருந்தாலும், விரிவான மீள் வாசிப்பு ஒன்றை செய்து பார்க்கவேண்டிய அவசியத்தை நான் உணர்ந்தேன்.

‘இந்திய சுயராஜ்யம்’ தமிழ் பிரதிகளில் பரலி நெல்லையப்பர், வேங்கடராஜுலு, டாக்டர் ஜீவானந்தன் மூவரின் மொழிபெயர்ப்பையும் முன்னர் வாசிக்க வாய்ப்பு கிடைத்தது. அதேபோல் இணையத்தில் கிடைத்த ஆங்கிலப் பிரதியையும் வாசிக்க முடிந்தது. மூலப்பிரதியை வாசித்தால் மட்டும் போதாது என்கிற தொந்தரவு ஏற்பட்ட நேரத்தில் அந்தோணி பரேல் உதவியிருந்தார். சிபி ஜோசப் தொகுப்பையும் பாதியளவில் அப்போது படித்த நினைவு.

இந்த அக்டோபர் 2 2024க்கான கூடுதல் முயற்சி, உழைப்பு , மேலதிக புரிதல் வேண்டும் என்ற உந்துதல் என்னை சிபி ஜோசப் தொகுப்பை முழுமையாக வாசிக்க வைத்தது. தொடர்ந்த தேடுதல் ராஜிவ் பார்கவாவிடமும், காந்தி அருங்காட்சியக நூலுக்கும் அழைத்துச் சென்றன.

ரயில்வே குறித்த காந்தியின் கருத்துக்கு

ஆதரவாக மார்க்சியர் எவராது பேசினரா எனப் பார்த்தபோது, இர்பான் ஹபீப் 'வரலாறு குறித்த கட்டுரைகள்' என்கிற நூலின் சம்பந்தப்பட்ட அத்தியாயங்களை பார்த்துக்கொண்டேன்.

அறிஞர் ஒருவர் ரூசோவுடனும் மார்க்ஸ் உடனும் ஒப்பீட்டு 'ஹிந்த் ஸ்வராஜ்' பற்றி எழுதியிருந்தார். ரூசோவின் சமுதாய ஒப்பந்தம் சுருக்கத்தையும், மார்க்சின் மானிபெஸ்டோவையும் நினைவு படுத்திக்கொண்டேன், மானிபெஸ்டோவின் முதல் அத்தியாயமான 'பூர்ஷ்வாக்களும் பாட்டாளிகளும்' என்பதில் மார்க்ஸ் எழுதிய சிலவரிகளை அப்படியே காந்தி சந்திப்பதை என்னால் உணரமுடிந்தது. மார்க்ஸ் முதலாளித்துவ கோரக்கொடுமைகளை சொல்லிவிட்டு, அதன் முற்போக்கு அம்சங்களையும் சொல்லிச் செல்வார். காந்தி அதனை முற்போக்கு என ஏற்காமல் அங்கு விலகி நிற்பார்.

சுயராஜ்யம் குறித்து காந்தி காலத்தவர் எனத்தேடிப்போனதில் வினோபாவின் சுயராஜ்ய சாஸ்திரம், சிங்காரவேலரின் சுயராஜ்யம் யாருக்கு, திரேந்திர மஜூம்தாரின் இதென்ன சுயராஜ்யம் , ஜெயப்பிரகாஷ் நாரயணின் மக்கள் சுயராஜ்யம், பெரியாரின் இது தொடர்பான குடிஅரசின் சில கட்டுரைகளை திரும்பவும் வாசித்துக்கொண்டேன்.

'ஹிந்த் ஸ்வராஜ்' குறித்து இணையவழி கட்டுரைகள் பெரும்பாலும் மூலப்பிரதியின் குரலை அழுத்தமாக சொல்லக்கூடியனவாக இருப்பதையும் கொஞ்சம் தேடலில் பார்க்கமுடிந்தது.

ஹிந்த் ஸ்வராஜ் பிரதியை எவரும் எளிதாக படித்துவிடமுடியும். அதற்கான 'background eay' மாதிரி ஒன்றை எழுதவேண்டும் என்கிற எண்ணம் இருந்தது. அப்படித்தருவது பிரதிக்கு சென்று வருவோர்க்கு சற்று உதவிகரமாக இருக்கும் என நினைத்தேன். அக்டோபர் 2 நிகழ்வில் பேசிய அறம் இதழாசிரியர்

சாவித்திரி கண்ணன் அவர்களும், சுருக்கமான கட்டுரை ஒன்று எழுதப்பட்டால் நன்று என்கிற கருத்தை அங்கு வெளியிட்டிருந்தார்.

வாசிப்பின் வழியாகவும், அக்டோபர் 2 உரையில் சொல்லப்பட்ட அம்சங்கள் சிலவற்றையும் இணைத்து இச்சிறு நூலை தந்துள்ளேன். ‘ஹிந்த் ஸ்வராஜ் தோற்றுவாயும் உள்ளடக்கக்கூறுகளும்’ எனத் தலைப்பிட்டுள்ளேன். தலைப்பு சாயல் லெனினிடமிருந்து பெற்ற ஒன்று.

இந்த சிறு நூலுடன் இணைப்பாக 2022, 2016ல் எழுதிய இரு சிறு கட்டுரைகளையும் தொடர்புள்ள பதிவுகள் என்கிற வகையில் இணைத்துள்ளேன்.

ஹிந்த் ஸ்வராஜை படிக்க அல்லது படித்திருந்தால் மேலும் கூடுதல் புரிதலுடன் காந்தியை அணுக இந்த சிறு பிரசுரம் உதவினால் நற்பேறு. உரை வழங்க வாய்ப்பளித்த காந்தி கல்வி நிலைய முன்னோடிகள் திரு அண்ணாமலை, திரு மோகன், திருமதி பிரேமா,திரு சரவணன் உள்ளிட்டவர்க்கு என் நன்றி. அன்று நிகழ்வில் பங்கேற்ற பெரும் ஆளுமைகள் அனைவருக்கும் என் வணக்கமும் அன்பும்.

8-10-2024

• ஆர். பட்டாபிராமன்

# Hind Swaraj- ஹிந்த் ஸ்வராஜ் – இந்திய சுயராஜ்யம்- தோற்றுவாயும் உள்ளடக்கக் கூறுகளும்

காந்தியடிகள் தன் நாற்பதாவது வயதில் 1909 ஆம் ஆண்டில் எழுதிய நூல் இந்திய சுயராஜ்யம் எனப்படுகிற ஹிந்த் ஸ்வராஜ். காந்தியடிகளின் வாழ்நாள் சிந்தனையின் வேராக இந்நூல் பார்க்கப்படுகிறது. காந்திய சிந்தனைகளுக்கான விதை நெல், நாற்றங்கால், தோற்றுவாய் என்று பலவாறு இந்நூல் பேசப்பட்டுள்ளது.

காந்தியால் தன் தாய்மொழி குஜராத்தியில் எழுதப்பட்டு, அவராலேயே ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்ட ஒரே நூலாக இது கருதப்படுகிறது. அவரது சுதந்திர சிந்தனையின் வெளிப்பாடாக, நம்பிக்கை முன்மொழிவுகளாக, தனித்த அரசியல் கோட்பாட்டிற்குரிய ஒன்றாகவும் இந்நூல் ஆய்வாளர்களால் கொண்டாடப்படுகிறது. இந்த சிறு நூலில் இடம் பெற்றுள்ள அவரின் கருத்துக்கள் ’உடோபியா’வல்ல, சோதிக்க தகுந்தவையே என்கிற பார்வை காந்தியிடம் மட்டுமின்றி , அவரின் ஆய்வாளர் பலரிடத்திலும்

இருப்பதைக் காணமுடிகிறது.

பிரிட்டிஷாரின் ஆட்சிக்கால இந்திய மனிதர்களிடம் அவர்களுக்கான பண்டைய நினைவு கிடங்கு ஒன்று இருப்பதை சுட்டிக்காட்டி, அதை மீட்டுக்கொள்வதை விடுத்து, தன்னை அடிமைப்படுத்தி வைத்திருக்கும் முறை ஒன்றிடமே மோகித்து கிடப்பதேன் என்கிற கேள்வியை இந்நூல் எழுப்பியது. நவீன நாகரிகம் எனும் நோயிலிருந்து விடுபடுவீர் என்கிற அறிவுரையை, தன் சொந்த சோதனைகள் வழி காந்தி தந்திருந்தார். நூல்வழி தான் பேசியவற்றை வாழ்நாள் முழுதும் அவர் சோதித்து கொண்டவராக இருந்தார்.

உரையாடல்களில் எப்போதும் நம்பிக்கைக்கொண்ட காந்தி, இந்நூலை வாசகர்- பத்திரிகை ஆசிரியர் என்கிற விவாத வழியே அமைத்துக்கொண்டார். பண்டைய இந்திய முறையான குரு- சிஷ்யன் என்கிற பாங்கில் அமைத்துக்கொள்ளவில்லை. நவீன உலகம் தந்த பத்திரிகை என்பதை அவர் பயன்படுத்தவே செய்தார். இந்நூல் எந்த வறட்டுத்தன பிடிவாதத்தையும் கொண்டதல்ல. காந்தி தன் வாழ்க்கையில் கண்டடைந்த, உணர்ந்தவைகளின் பிரதிபலிப்புகளாக அந்நூலை 1909ல் எழுதியிருந்தார். சர்ச்சைக்குரிய கருத்துக்கள், ஏற்கமுடியாது என ஒருவர் எண்ணக்கூடிய கருத்துக்கள் இடம் பெற்றிருக்கலாம். அவர் தொடர் உரையாடல்களுக்கும், அவற்றின் விரிவுகளுக்கும் இடமளித்தே நூலை எழுதியுள்ளார். வாசிக்கும் காலந்தோறும் புதிய அர்த்தங்களுக்கும் விரிவுகளுக்கும் இடமளிக்கின்ற நூலாக படிப்பவர் உணரமுடியும்.

19 ஆம் நூற்றாண்டு எழுத்துக்கள் கேள்வி பதில் என்கிற வகையில்- "கடேசிசம்’ வகையில்

எழுதப்பட்டிருப்பதைக் காணமுடியும். கிறிஸ்துவ ஞாயிறு உபதேசங்கள் இவ்வகையில் நடந்துள்ளன. மார்க்சின் உற்றத்தோழர் எங்கெல்ஸ் கூட இந்த கடேசிசம் முறையில்தான் (catechism) The Principles of Communism நூலை யாத்திருப்பார். காந்தியும் இம்முறையை எடுத்துக்கொண்டு உரையாடலை பெருக்கியிருப்பார்.

தென்னாப்பிரிக்கா இந்தியர்கள் அவதி துயர் துடைக்க அவர் இங்கிலாந்து பயணத்தை 1906 லும், 1909லும் மேற்கொண்டார். லண்டன் அவர் படித்த பழகிய நகரம்தான்.

தென்னாப்பிரிக்கா ஒற்றுமை என்பதற்கான நகல் அரசியல் சாசனம் குறித்துப் பேசுவதற்கு அந்நாட்டு தலைவர்கள் போத்தா, ஸ்மட்ஸ் போன்றோர் 1909 ல் லண்டன் சென்றனர். அந்த அரசியல் சாசனம், ஏற்கனவே பாதிக்கப்பட்ட ஆயிரக்கணக்கான இந்தியர்களுக்கு மேலும் பாதகமாக அமைந்துவிடக்கூடாது என்கிற கவலையில் காந்தி மற்றும் ஹாஜி ஹபீப் ஆகிய இருவரும் இங்கிலாந்திற்கு ஜூலை 1909ல் சென்றனர். தென்னாப்பிரிக்கா இந்தியர்களுக்கான துயர் துடைக்கும் வேலைகளில் தங்களால் முடிந்தவற்றை இருவரும் செய்கின்றனர். உடனடி பலன் ஏதுமின்றி நவம்பர் 13,1909 அன்று தென்னாப்பிரிக்காவிற்கு திரும்பிட கப்பல் ஏறுகின்றனர்.

லண்டனில் இருந்த இந்த மாதங்களில் ஏராள இந்தியர்களை சந்தித்து காந்தி உரையாடினார். அவர்கள் ஒருமித்து பிரிட்டனின் வெளியேற்றம் வன்முறை வழியில் மட்டுமே சாத்தியமாகும் என்கிற கருத்தை வெளிப்படுத்தினர். லண்டனிலிருந்து தன் அனுபவங்களை மகன்லால், போலக், கல்லன்பக் போன்றவர்களுக்கு காந்தி எழுதிக்கொண்டிருந்தார். பிரதிநிதிகளின் குறிப்புகள் என தென்னாப்பிரிக்க

இந்தியர்களுக்கான செய்திகளையும், தாங்கள் செய்தவை குறித்தும் ‘டெபுடேஷன் நோட்ஸ்’ எனப்படும் அறிக்கைகளை அனுப்பிக்கொண்டிருந்தார்.

காந்தி லண்டனில் இறங்குவதற்கு 9 நாட்கள் முன்னதாக, ஜூலை 1 அன்று பிரிட்டிஷ் அதிகாரி கர்சான் வைலியை, பஞ்சாபை சார்ந்த படிக்க வந்த இளைஞர் மதன்லால் திங்கரா கூட்டம் ஒன்றில் கொலை செய்தார். லால்காக்கா என்பவரும் கொலையுண்டார். திங்கரா மீது காந்தி வருகிற நேரம் விசாரணை நடந்துகொண்டிருந்தது. சில பிரிட்டிஷ் நல்லெண்ணக்காரர்களும் மரண தண்டனை திங்கராவிற்கு வேண்டாம் என வாதிட்டு வந்தனர்.

காந்தி அப்போதே அன்பு வழி- சாத்வீக எதிர்ப்பு- உறுதியான நிலைகுலையா அச்சமற்ற சத்தியாகிரகம் என்கிற போராட்ட முறையை சோதித்தவராக இருந்தார். கொலை வழியாக எதையும் செய்வதை அவரால் ஏற்கவே முடியாது. திங்கரா போன்றவர் தவறாக வழிகாட்டப்பட்டு வன்முறை வழியில் வழுக்கி விழவைக்கப்பட்டதாகவே காந்தி கருதினார். இவர்கள் போன்ற இளைஞர்களை விட்டில் பூச்சிகளாக தியாகம் செய்யவைக்கும் எழுத்துக்களைத் தருபவர், மயக்கு சொற்பொழிவுகள் செய்பவர்களே தண்டிக்கப்படவேண்டியவர் என காந்தி கருதினார். எய்தவன் இருக்க அம்பு நோகடிக்கப்பட்டதாக அவர் எண்ணினார்.

சோசலிஸ்ட்கள் 1907ல் ஸ்டட்கர்டில் கூடியபோது, அங்கு லெனின், ரோசா லக்சம்பர்க் போன்ற புரட்சியாளர்களுடன் விரேந்திரநாத் சட்டோ, மேடம் காமா போன்ற இந்தியர்களும் பங்கேற்றனர். இத்தாலியின் மாஜினி இந்திய இளைஞர்களுக்கு ஈர்ப்பான நாயகனாக இருந்தார்.

தாரக்நாத் தாஸ் என்பார் அமெரிக்கா,

கனடாவிலிருந்த நண்பர்கள் பலரின் உதவியுடன் ‘ப்ரி இந்துஸ்தான்’ என்கிற இந்திய விடுதலைக்கான பத்திரிகையை நடத்தி வந்தார். அவர் டால்ஸ்டாயுடன் விவாதம் மேற்கொண்டார். தாரக்கும் டால்ஸ்டாயும் நடத்திய உரையாடல்களை தனியாக தாரக்நாத் கொணர்ந்துள்ளார். டால்ஸ்டாய் பதிலை ஏற்க இயலாது என்று தெரிவிக்கும் கட்டுரை ஒன்றை சரோஜினி நாயுடுவின் சகோதரரான விரேந்திரநாத் சட்டோபாத்யாயா எழுதினார். இந்த விவாதம் பற்றி டாக்டர் பிரஞ்சீவன் மேத்தா காந்தியிடம் தெரிவிக்கிறார்.

தாரக்நாத்திற்கு வன்முறை வழியல்ல, அன்பே வாழ்வின் வழி என்பதை சொல்லும் வகையில் டால்ஸ்டாய் எழுதிய கடிதம் காந்திக்கு கிடைத்தது. டால்ஸ்டாயின் நூல்களுடன் பழக்கம் கொண்ட காந்தி, டால்ஸ்டாய்க்கு கடிதம் எழுதி, அவரின் சம்மதத்துடன் ‘ஓர் இந்துவிற்கு கடிதம்’ என்பதைக் கொணர முயற்சிகள் மேற்கொண்டார். அந்நூலிற்கான முன்னுரையைக்கூட தன் கப்பல் பயணத்தில்தான் அவர் எழுதினார்.

லண்டனில் இருந்தபோது அவர் பல கூட்டங்களைப் பேசினார். முக்கியமாக அவர் கிழக்கும் மேற்கும் அவற்றின் நாகரிகம் பற்றியும் , சாத்வீக அமைதி வழி எதிர்ப்பு போராட்டம் குறித்தும் மாணவர்கள் உட்பட பலரிடம் பேசினார். அப்படியாக அமைந்த கூட்டம் ஒன்றாக காந்தி தலைமையில் சாவர்க்கர் உரையாற்றும் விஜயதசமி கூட்டமும் அக்டோபர் 24, 1909 அன்று அமைந்தது. இந்தியர் பலரின் சந்திப்பு, அவர்களின் உத்வேக அவசரங்கள், வன்முறை மீதான ஆராதனை, இந்தியாவில் காங்கிரசின் நிலை- அதன் தலைவர்கள்- சூரத் பிளவு போன்ற புறச் சூழல்கள் குறித்து அவர் விரிவான விடையை மனதளவில் தேடிக்கொண்டேயிருந்தார். இவர்கள் வேறுபட்டாலும் ஏன் அனைவரும் நவீன

நாகரிகம்- அதன் பண்பாடு பயன்பாடு என்பதை ஏற்கும் ஒரு புள்ளியில் சந்திப்பவர்களாக இருக்கின்றனர் என்பதையும் காந்தி சிந்திக்கலானார்.

லண்டன் படிப்புக்காலம் தொடங்கி, தனது இந்திய குடும்பப் பின்னணியுடன், அவரது அறிவுசார் வளர்ச்சியின் பாதை மிக விரிவான ஒன்றாகவே அமைந்ததை நாம் காணமுடியும். சைவ உணவு குறித்த அமைப்புகளில் பயிற்சி, தியோசிபிகல் எழுத்துக்கள், புத்தர், கீதை, இந்திய உபநிடதங்கள், கிறிஸ்துவ இலக்கியங்கள்- மலைப் பிரசங்கம், குரான் வாசிப்பு இன்னும் பல்வேறு மதப்பிரதிகள் குறித்த அறிமுகம், இந்தியாவின் வைர வியாபார குடும்பப் பின்னணியில் பெரும் இந்திய பண்டைய இலக்கிய சிந்தனையாளராக இருந்த ராய்சந்துடன் உரையாடி அனேகானந்தவாதம்- விவாத பன்முகம் கற்றல் என அவரின் உள்வாங்கும் திறன் வலுவாக போய்க்கொண்டிருந்த காலமது.

தாதாபாய், கோகலே போன்ற தலைவர்களுடன் நெருக்கம், இந்திய ஒபீனியன் இதழில் தொடர்ந்து இந்தியா குறித்து எழுதுதல் என்பனவும் நடந்துகொண்டிருந்தது. தனது சட்டப்படிப்பு வழி கற்றுக்கொண்டவையும் அவருக்கு எழுத்தை கச்சிதமாக வடிவமைக்க உதவின. பிளாட்டோ வழியாக சாக்ரடிசை உணர்ந்து அவரை பெரும் சத்தியாகிரகி என உருவகித்தது, ரஸ்கினை உள்வாங்கி கடையனுக்கு மோட்சம்- உழைப்பு வழி வாழ்வே சிறந்தது என்கிற உழைப்பு கோட்பாடு- சமத்துவ சிந்தனைகள் அவரை பெருமளவு பற்றிக்கொண்டன. ரஸ்கின் ‘அன் டு தி லாஸ்ட்’ நூலைத்தான் அவர் தன் உள்வாங்கலில் சர்வோதயா என நூலாக்கி தந்தார்.

ரஸ்கினிடமிருந்து அவர் 1904லேயே மூன்று முக்கிய கோணங்களை எடுத்தாண்டார். தனிநபர்

ஒருவரின் நன்மை அனைவரின் நன்மையில் அடங்கியுள்ளது. வக்கீலின் உழைப்பும் முடிதிருத்துவர் உழைப்பும் சமமானதே. அவரவர் உழைப்புக்கேற்ற ஊதியம் உரிமைகளை அவரவர்கள் பெறலாம். உழைத்து உண்பதே சிறந்தது. விவசாயமும் கைத்தொழிலும் சிறப்பானவை என நாம் அவற்றை எடுத்துக்கொள்ளலாம்.

டால்ஸ்டாயிடமிருந்து அவர் 1905லேயே கற்றுக்கொள்ளவேண்டியவை என்ன என இந்தியன் ஒபீனியலில் எழுதலானார். சொத்து மீதான மோகம் நீக்குதல் என்பதை அவர் இந்திய இலக்கியங்களிலிருந்து குறிப்பாக உபநிடதத்திலிருந்து எடுத்துக்கொண்டாலும், டால்ஸ்டாய் எழுத்தில் செல்வத்திற்காக ஓடாதே என்பதை சரி பார்த்துக்கொண்டார். தீமை செய்தார்க்கும் நன்மை என பைபிள் சொன்னதையும் , எவரிடமும் சண்டைக்காக நிற்காதே, உரிமையைவிட கடமையில் கவனம் கொள், விவசாயம் உன்னதத் தொழில், ஆலைகள் சுரண்டல் கூடம், அன்பே வாழ்வின் ஆதாரம் என சிலவற்றை அவர் டால்ஸ்டாயிடம் சரி பார்த்துக்கொண்டார்.

லண்டனில் இருந்தபோதுதான் செப்டம்பர் 1909ல் அவர் எட்வர்ட் கார்பண்டரின் புகழ் வாய்ந்த நூலான ‘நாகரிகம் காரணங்களும் தீர்வும்’ என்கிற நூலை (civilisation its causes and cure) அவர் படித்து முடித்தார். மேலை நவீன நாகரிகம் மீதான அவரிடம் இருந்த பார்வையை இந்நூல் உறுதிப்படுத்தியது. அதேபோல மாக்ஸ் நோர்டாவ் எழுதிய நாகரிகம் குறித்த நூல் ஒன்றையும் அவர் செரித்துக்கொண்டார்.

பரபரப்பான அதிவேக உலகின் தீங்குதனை பேசக்கூடிய டைலர் அவர்களின் ‘வேகத்தின் வழுவாதம்’ ( fallacy of speed ) என்பதும் அவர் உள்

சென்றது. 1909 செப்டம்பர் 18ல் எழுத்தாளர் செஸ்டர்டன் கட்டுரை ஒன்றும் அவரை தொந்தரவு செய்திருந்தது.

தோரோவை அறிவதற்கு முன்பாகவே அவர் சத்தியாகிரக சோதனையை செய்திருந்தாலும், தோரோவின் வாசிப்பால் சிவில் ஒத்துழையாமையின் சிறப்பை அவர் மேலும் கூர்தீட்டிக்கொண்டார். மாஜினியிடம் மனிதனின் கடமை என்பதின் அழுத்தத்தை அவர் உணர்ந்தார்.

பிரிட்டிஷ் ஆட்சியின் கொள்ளை குறித்த நவ்ரோஜியின் எழுத்துக்களும் , ஆர் சி தத்தின் பொருளாதார வரலாறும் அவர் கண்களை கலங்க வைத்தன. இக்கொள்ளைக்கு தாமே முன்வந்து இந்தியர் தலைவணங்கி அனுமதிப்பதை பார்த்து அவர் கவலைகொண்டார்.

இந்திய சுயராஜ்யம் நூல் இப்படியான பல்வேறு அறிவார்ந்தவர்களின் படைப்புக்களை உள்வாங்கி காந்தி தன் மொழியில் வெளிப்படுத்திய நூலாக அமைந்ததைக் காண்கிறோம். அந்நூல் இறுதியில் இணைப்பாக கொடுத்துள்ள நூல் பட்டியலில் உள்ள 20 நூல்களில் இரண்டு மட்டுமே இந்தியர் நூல்கள், மீதி அனைத்துமே இயந்திரத்தொழில் நாகரிக உலகு குறித்த மேலைச் சிந்தனையாளர்கள் விமர்சனமே என நம்மால் காணமுடியும். இந்தியாவின் பண்டை நாகரிகம் குறித்து விதந்து பேசியுள்ள சிறந்த சிந்தனையாளர்களாக மாக்ஸ்முல்லர் , செய்மன் கே, விக்டர் கசின், ஷெலிகல் , துபாயிஸ், தாமஸ் மன்றோ, வெட்டர்பர்ன் போன்ற சிலரின் பெயரையும் அவர் தந்துள்ளதைக் காண்கிறோம். நூறு பக்க நூல் எழுத எவ்வளவு விரிவாக அவர் கற்றுள்ளார் என்கிற பிரமிப்பை ஒருவரால் உணரமுடியும்.

லண்டனிலிருந்து தென்னாப்பிரிக்கா திரும்பிட 'கில்டோனின் காசில்' கப்பலில் ஏறியதிலிருந்தே தன்

கடுமையான வேலையை அவர் மேற்கொண்டார். நவம்பர் 13- 22, 1909 ஆகிய 10 நாட்களில் கப்பலில் கிடைத்த காகிதங்களில் 271 பக்கங்களில் அவர் ‘ஹிந்த் சுயராஜ்யா’ வை குஜராத்தி மொழியில் எழுதினார். நவ 22 அன்று நூலை முடித்து அதற்கு முன்னுரை எழுதியுள்ளார். வலது கை வலித்தபோதெல்லாம் இடது கையால் எழுதியுள்ளார். எவ்வளவு பக்கங்கள் இடது கையால் எழுதினார் என்பதில் மாறுபட்ட எண்ணிக்கைகள் சொல்லப்பட்டு வருகின்றன.

நன்கு மனதில் ஊறப்போட்ட சிந்தனை என்பதால் மிகவும் கவனமான சொற்கள் வருவதில் கஷ்டம் ஏதுமில்லாமல் போனது. மிகக் குறைந்த இடங்களிலேயே அவர் திருத்தியுள்ளார் என ஆய்வாளர்கள் சொல்கின்றனர்.

தென்னாப்பிரிக்கா வந்தவுடன் பீனிக்ஸ் ஆசிரம அச்சகத்திலேயே இந்தியன் ஒபீனியன் இதழில் 1909 டிசம்பர் 11, டிசம்பர் 18ல் இந்திய சுயராஜ்யம் வெளியிடப்படுகிறது. 1910 ஜனவரியில் குஜராத்தி நூலாக வெளிவந்து இந்தியாவிற்கு அனுப்பப்படுகிறது.

கல்லன்பக்கிற்கு கப்பலில் இருக்கும்போதே இந்நூல் பற்றி நவ 25, 1909 அன்று காந்தி முதலில் தெரியப்படுத்துகிறார். அங்கும் கூட நூலின் தலைப்பை சொல்லாமல், பின் குறிப்பில் ஒரு நூலை சுயமாக எழுதியிருக்கும் செய்தியை பரிமாறிக்கொள்கிறார்.

கல்லன்பக் வேண்டுகோளை ஏற்று , இருவருக்கும் கிடைக்கும் நேரங்களில் காந்தி ஆங்கிலத்தில் சொல்லச் சொல்ல கல்லன்பக் எழுதுகிறார். அப்பிரதியை தென்னாப்பிரிக்கா ஆங்கில நண்பர் சிலருக்கு அனுப்பி அவர்களின் கருத்துக்களை காந்தி கேட்கிறார்.

காலம் செய்யும் வினைகள் விநோதமானதாக அமையும். பம்பாயில் உளவுத்துறையினர் கையில் குஜராத்தி நூல் சிக்கியது. காந்தி எதையும் இரகசியமாக , ஒளிவு மறைவாக செய்யவில்லை. உளவு அமைப்பினர் குஜராத்தி மொழி அறிந்த ஒருவரிடம் மார்ச் 10, 1910ல் கொடுத்து அதன் ஆங்கில குறிப்பைக் கேட்கின்றனர். 21 பக்க குறிப்பு கொடுக்கப்படுகிறது. ஆசிரியர் வன்முறையையோ கலகத்தையோ தூண்டவில்லை. ஆனால் பிரிட்டிஷ் அரசாங்கம் எதிர்த்த போராட்ட அறைகூவல் என்கிற ஆபத்து அதில் இருக்கிறது என்கிற பொருளில் அக்குறிப்பு எழுதப்பட்டிருந்தது. எம் கே காந்தி பெயரில் வந்த பப்ளிகேஷன்ஸ் என்ன என்ன என்பதைப் பார்த்து அவற்றை எல்லாம் இந்திய சுயராஜ்யம் என்பதுடன் தடைப் படுத்தினர். சாக்ரடிஸ் குறித்த பிளாட்டோவின் நூல், கமல் அடாதுர்க் உரை, ரஸ்கின் நூல் என 4 வெளியீடுகளும் மார்ச் 24, 1910ல் தடை செய்யப்பட்டன. காங்கிரஸ் ஆட்சி அமைத்த பின்னர்தான் 1938 டிசம்பர் 21ல் அதிகாரபூர்வமாக தடை நீக்கப்படுகிறது.

நமது வெளியீடுகள் தடைக்கு உள்ளாக்கப்பட இருக்கின்றன என்ற செய்தி அறிந்த காந்தி அது குறித்து இந்திய ஒபீனியனில் எழுதிவிட்டு, அதன் ஆங்கில நூல் வரவிருக்கிறது. அது தனியாக 6 பென்ஸ் விலையில் வரலாம் எனத்தெரிவிக்கிறார். மார்ச் 20 1910 அன்றே ஆங்கில நூலை முன்னுரை எழுதி வெளியிடுகிறார். இந்தியன் ஹோம் ரூல் என அது வெளியானது. 1914ல் குஜராத்தி பதிப்பு மீண்டும் வெளியாகிறது.

தமிழ்நாட்டில் முதன்முறையாக ராஜாஜி குறிப்புடன் ஆங்கில நூல் 1919ல் வெளியாகிறது. அதன் தமிழ் மொழிபெயர்ப்பு பரலி சு நெல்லையப்பர் அவர்களால் செய்யப்பட்டு மே 1921ல்

கொணரப்படுகிறது. ராஜாஜி குறிப்புடன் வந்த ஆங்கில நூல் ‘ஹிந்த் ஸ்வராஜ் அல்லது இந்தியன் ஹோம் ரூல்’ என வந்தது. இதன் பின்னர் அந்த நூல் 1938ல் நவஜீவனால் கொணரப்பட்டு அதற்கு மகாதேவதேசாய் முன்னுரை எழுதுகிறார். இதன் திருந்திய பதிப்பாக 1939ல் கொணரப்பட்டு, அப்பதிப்பே இன்றுவரை வெளி வந்துகொண்டிருப்பதைக் காண்கிறோம்.

1924ல் அமெரிக்காவில் ஹிந்த் ஸ்வராஜ் ஜான் ஹோம்ஸ் மற்றும் ஹரிதாஸ் மஜூம்தார் முயற்சியால் ‘ஸெர்மன் ஆன் தி ஸீ’ ( sermon on the sea) என்று வெளியானது. அமெரிக்காவில் காந்தியைக் கொண்டு சென்றவர்களில் இவர்கள் இருவருக்கும் முக்கிய பங்கிருக்கிறது. இருவரும் காந்தி குறித்து நூல்கள் எழுதியுள்ளனர்.

இங்கிலாந்தில் ‘ஹிந்த் ஸ்வராஜ்’ குறித்த விவாதத்திற்கு ‘ஆர்யன் பாத்’ என்கிற இதழ் மேடை அமைத்துக்கொடுத்தது. 1938 செப்டம்பர் சிறப்பிதழ் ஒன்றை சோபியா வாடியா ஆசிரியராக இருந்து பல்வேறு அறிஞர்களின் விவாதப் பொருளாக ‘இந்திய சுயராஜ்யத்தை’ மாற்றினார்.

‘இந்திய சுயராஜ்யம்’ 2009ல் நூற்றாண்டை கண்டபோது அந்தோணி பரேல் கொணர்ந்த Hind Swaraj and Other writings வந்தது. வார்தாவில் நவம்பர் 2009ல் அமர்ந்து இரு நாட்கள் கருத்தரங்கம் நடத்தி கட்டுரைகளைப் பெற்று Reflections of Hind swaraj Edited by Sibi K Joseph, Bharath வந்தது. காந்தி அருங்காட்சியகம் சார்பில் Gandhi on Hind Swaraj and select Views of others by National Gandhi Museum வந்தது. 1985ல் நாகேஸ்வர பிரசாத் Hind Swaraj A fresh look by Gandhi Peace foundation சார்பில் கொணர்ந்துள்ளார். 2022ல் ராஜிவ் பர்கவா ஆசிரியராக இருந்து பலர் கட்டுரைகளைத் தொகுத்து Politics Ethics and Self –

rereading of Hind Swaraj கொணர்ந்தார்.

தமிழில் மகாத்மா தொகுப்பு நூல் வால்யூம் 1ல் வேங்கடராஜு மொழிபெயர்ப்பில் இந்திய சுயராஜயம் 1957ல் வந்ததைக் காண்கிறோம். இன்றும் சிறந்த மொழிபெயர்ப்பாக இதை உணரமுடிகிறது. 2019ல் காந்தியின் 150 ஆம் ஆண்டில் மறைந்த ஈரோடு டாக்டர் ஜீவானந்தன் அவர்களில் மொழிபெயர்ப்பில் (சற்று சுதந்திரமான மொழிபெயர்ப்பாக) இந்திய சுயராஜ்யம் வந்தது. பரலி மொழிபெயர்ப்பும் வேங்கடராஜு மொழிபெயர்ப்பும் இணையத்தில் கிடைக்கின்றன.

1909ல் சிறு நூலாக வெளிவந்து கடந்த நூறாண்டில் தொடர்ந்த விவாதப்பொருளாக 'இந்திய சுயராஜ்யம்' இருப்பதைக் காண்கிறோம்.

காந்தி இந்நூலில் 'ரீடர்' என எவரையெல்லாம் மனதில் வைத்து எழுதினார் என்பதை முன்னரே சுட்டிக்காட்டியுள்ளேன். அந்தோணி பரேலுக்கு 4 முக்கிய ஆளுமைகள் இந்த வாசக அடையாளங்களாக இருக்கும் எனத் தோன்றியுள்ளது. சாவர்க்கர், விரேந்திரநாத் சட்டோ, ஷியாம்ஜி கிருஷ்ண வர்மா, டாக்டர் பிரஞ்சீவன் மேத்தா என்கிற நால்வரை பரேல் உருவகப்படுத்துகிறார்.

1940வரை காந்தி எவருக்காக எழுதினேன் என எவர் பெயரையும் குறிப்பிட்டு சொல்லவில்லை. 1940 பிப்ரவரி 21 அன்றுதான் தன் நண்பர் டாக்டர் பிரஞ்சீவன் மேத்தாவிற்காகத்தான் எழுதியதாக காந்தி சேவா சங்க கூட்டத்தில் சொல்கிறார். காந்தி லண்டனில் இருந்த 1909ன் மாதங்களில் இருவரும் இரவு 11 மணிக்கு மேல் அமர்ந்து பல்வேறு அம்சங்களை விவாதித்த செய்தியை டாக்டர் மேத்தா பற்றி எழுதிய மெக்ரோத்ரா சொல்கிறார்.

காந்தி 1940 பிப்ரவரியில் பேசும்போது, நாங்கள் இருவரும் நடத்திய உரையாடல் அப்படியே என்னால் எழுதப்பட்டுள்ளது. அந்த நண்பரும் மனம் மாற்றம் பெற்றார் என்கிறார். விவாத காலத்தில் மேத்தா காந்தியை நட்புரிமையுடன் விமர்சித்தவர். ஆரம்பத்தில் காந்தி ‘வாசகர்’ எனப் பொதுப்படத்தான் பேசியுள்ளார். வன்முறை வழியை நாடும், ஆங்கில கல்வி பின்புலம் கொண்ட, இயந்திர தொழில் சூழல் உற்பத்தி- நாடாளுமன்றம் நவீன நாகரிகம் ஏற்கும் மத்தியதர வர்க்கம், வெளிநாட்டு வாழ் புரட்சியாளர்கள் என்பதாகவே நாம் உணர்ந்த்தப்படுகிறோம். 1940ல் அவர் மேத்தா என்கிற பெயரை வாசகரின் அடையாளமாக தருவதைக் காண்கிறோம்.

ஏன் எழுதினார்- எது அவரை அவசரமாக உந்தி தள்ளியது என்கிற கேள்வியை காந்தியே எழுப்பிக்கொண்டு பதிலும் தந்துள்ளார். எனது இதயத்தை இனியும் திறக்காமல் இருக்க முடியாது என்கிற அவதியை அவர் உணர்ந்தார். வன்முறை கொலைவழி கூடாது என்பதை கொண்டு செல்லவேண்டிய அதிஅவசரம் அவரை உந்தித் தள்ளியுள்ளது. இந்திய சுயராஜ்யத்திற்கான தீர்வு வன்முறை வழி அமைவது பெரும் தீங்காக அமையும் எனக் கருதினார். காலனியம் என்கிற கொடுமையைவிட நவீனநாகரிகத்தின் கொடுமை அதிகமாக இருக்கும் என அவர் ஊகித்தார். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்கு எதிராக இந்தியா தனக்கான தனித்த வழி போராட்டமான சாத்வீக எதிர்ப்பு- சத்தியாகிரகம் அவசியம் என அவர் முன்வைக்க விழைந்தார்.

இந்தியாவிற்கென நீண்ட மரபான நினைவு கிடங்கு இருக்கிறது. அதன் அழகே ‘கட்டுபாடுள்ள எளிமை, போதும் என்கிற நிறைவுகொண்ட தானே முன்வந்து மேற்கொள்ளும் வறுமை, அவசர வேகம்

தவிர்த்த நிதானகதி நடவடிக்கைகள்’ என்பதை சொல்ல அவர் விழைந்தார். அவரது இந்த நூல் ஒவ்வொரு இந்தியனின் , ஏன் இன்னும் ஒவ்வொரு மனிதனின் சுய ஒழுக்க நன்னெறிக்கான மேடை என நாம் உணரமுடியும். தடம் புரளும் மானுடத்தை, அதன் உன்னத மானுட நேயத்தை சுட்டிக்காட்டி மீட்கும் படைப்பாக உணரலாம்.

லெனின் காலனியம் என்பதை முதலாளித்துவ பேராசை என விளக்க முனைந்தால் காந்தியோ காலனியத்தை நவீன நாகரிகத்தின் பேராசையாக காட்டுகிறார்.

ஹிந்த் ஸ்வராஜ் நூல் 20 இயல்களால் அமைந்துள்ளது. ஒவ்வொரு இயலும் வாசகர்- ஆசிரியர் என்கிற கேள்வி பதிலாக அமைக்கப்பட்டுள்ளது. மொத்தம் 91 கேள்வி பதில்களை இந்நூலில் காந்தி விவாதத்திற்கு எடுத்துக்கொண்டுள்ளார். முதல் 5 அத்தியாயங்களில் 10, 3, 2, 7, 7 என 29ம், அடுத்த 5ல் 3, 3, 6, 8, 4 என 24ம், அடுத்த 5ல் 2, 1, 2, 6, 2 என 13ம், இறுதி 5ல் 2, 7, 5, 5, 6 என 25ம் ஆக மொத்தம் 91 கேள்வி அவற்றிற்கான பதில் விளக்கங்களை நாம் பார்க்கிறோம்.

பல ‘தீம்களில்’ காந்தி நூலில் விவாதித்துள்ளார்.

பத்திரிகையாளர் பணி என்ன- அவை எப்படி இருக்கின்றன?

காங்கிரசின் பணியை எப்படி பார்க்கவேண்டும்- முன்னோடியாக வேலை செய்த தலைவர்களை மதியாமல் இருக்கலாமா?

வங்கப்பிரிவினை விளைவுகள் என்ன? மக்களின் அச்சம் போனதா, சூரத்தில் நடந்த பிளவு

அதிருப்தி இருப்பதன் அவசியம்

எது சுயராஜ்யம்- இங்கிலாந்தை அனுப்பிவிட்டால் அதுதானா? இல்லையெனில் எது?

இங்கிலாந்தின் நிலை என்ன? அங்கு நாடாளுமன்றம், உறுப்பினர், பிரதமர் குணாதிசயங்கள் யாவை?

இந்தியா தன்னை இழந்தது ஏன்? பிரிட்டிஷால் ஏன் நீடிக்கமுடிகிறது?

ரயில்வே போன்ற விரைவு போக்குவரத்து வரமா சாபமா ?

டாக்டர்களும் வக்கீல்களும் தெய்வப்பிறவிகளா?

மதம் பற்றிய புரிதல் என்ன? இந்து முஸ்லீம் பகை நிரந்தரமான ஒன்றா – பசுவதை தடுக்க முஸ்லீம் சகோதரனின் கொலை அவசியமா?

எது உண்மையான நாகரிகம்? சந்தோஷம் என்பது பணம் மற்றும் செல்வ நிலையா அல்லது மனநிலையா? எல்லா நாகரிகத்திலும் குறைகள் போதாமைகள் இருக்கின்றனவே- அனைத்து நாகரிகங்களும் சோதனையில் தானே இருக்கின்றன

வரலாறு என்பதை எப்படி புரிந்து கொள்வது? வெறும் யுத்தங்கள் தகராறுகள் தானா? ஒன்று இதுவரை நடக்கவில்லை என்பதால் இனி எப்போதும் நடவாதா?

இந்திய விடுதலைக்கான வழி என்ன? கொலை வழி ஏன் கூடாது?

தேசபக்தி என்பது எது?

மிருக பலமா ? அன்பு சாத்வீக எதிர்ப்பா?

பெட்டிஷன் போதுமா ? அதற்கான துணை நிற்கும் மனித சக்தி வேண்டாமா?

பெரும்பான்மை என்பதே எப்போதும் சரி என்பதும் மூட நம்பிக்கையில்லையா? சீர்திருத்தங்கள் பல சிறுபான்மையினர் உழைப்பாலேயே வந்துள்ளதே..

உரிமைக்கான முன்னுரிமையா? கடமைவழி உரிமை அடைதலா?

சாத்வீக எதிர்ப்பு என்பது தான் உணர்ந்த ஒன்றின் நியாயத்திற்காக தன்னை இழக்கவும் சுயவதையும் ஏற்பதுமான வழிதானே? அங்கு கொலைவழி நியாயம் என ஏதும் இல்லை

சாத்வீக எதிர்ப்பு கோழையின் ஆயுதமல்ல..ஆன்ம பலம் – அச்சமின்மை. கொலை செய்வது என்பதைவிட மேலான காரணம் ஒன்றிற்காக உயிர் துறப்பதே சாத்வீக எதிர்ப்பின் தன்மை

சாத்வீக எதிர்ப்பு சத்தியாகிரகிக்கு கற்பு நெறி, ஏற்றுக்கொண்ட வறுமை, உண்மையை அறிதல் சொல்லுதல், அச்சமின்மை என்கிற குணங்கள் வேண்டும்

எவர் ஒருவருக்கும் முற்றுரிமை என ஏதும் இருக்கமுடியுமா? எனது உண்மை என்பது போல் பிறரின் உண்மை என்பதும் இருக்கும் என உணர்தல்

அவர் அப்படி செய்கிறாரே- நான் செய்தால் அவரும் செய்வாரா என்கிற கேள்வியை விடுத்து, என் மனதிற்கு சரி எனவே செய்கிறேன். சரி என்பதால் பரிந்துரைக்கிறேன் என்கிற பகுத்தறிவு

எது கல்வி ? எழுத்தறிதலா ஆங்கிலம் கற்றலா விஞ்ஞான பாடங்களா?

சுரண்டலுக்கான இயந்திரங்கள் ஏன் ? உழைப்பவரை அந்நியப்படுத்துவது ஏன்? சமூகம் சார் இயந்திரங்களின் பொருத்தப்பாடு- உள்ளூர்

தொழிலை வீழ்த்தாத இயந்திரம்- மனித கை கால்களை பயன்படுத்த உதவும் இயந்திரம் போன்ற ஏராள உரையாடல்களை காந்தி இந்நூலில் பெருக்கியிருப்பார்.

இந்திய சுயராஜ்யத்தில் காந்தியின் முன்மொழிவுகளாக கீழ்கண்டவற்றை நாம் எடுத்துக்கொள்ளலாம். பிரதியை வாசிப்பவர் இதனை உணரமுடியும்.

1. வெறுப்பிற்கு பதில் அன்பு நெறி- பலாத்காரத்திற்கு பதில் தன்னலத் தியாகம்- மிருக சக்திக்கு பதில் ஆன்ம சக்தி

2. சாத்வீக எதிர்ப்பு இந்தியாவிற்கு மட்டுமன்றி மனித குலத்திற்கே அவசியமான வழியாகும்

3. ஆள்பவர்கள் செய்வதில் உடன்பாடின்மை இருக்கும் நிலையில் சாத்வீக எதிர்ப்பு ஒருவரின் கடமையாகிறது

4. மேற்கிலிருந்து இந்தியா பெற்று வருகிற நவநாகரிகத்தை இந்தியா கைவிடுமாயின் அதற்கு நன்மையே உண்டாகும்

5. நான் சொல்லும் சுயராஜ்யத்தை அடைய இந்தியா இன்னும் பக்குவமாகவில்லை. ஆனால் அது எனது சித்தாந்தம். அதற்கு தனிப்பட்ட ஒருவனாக ஆயினேன் என்றாலும் பாடுபட்டே வருவேன்

6. உயர்வான நாகரிகம் என்பது புதியவகை மருத்துவம் நீதிஸ்தலம், ரயில்வே, இயந்திரத் தொழிலில் இல்லை. ஒழுக்கத்தை இம்மியும் இவைகள் உயர்த்தவில்லை. தீமைகளாகவே இருக்கின்றன. உயர்வான நாகரிகம் எளிமையிலும் தியாகத்திலுமே இருக்கிறது

7. நான் முன்வைத்துள்ள திட்டத்தில் அகிம்சை மட்டுமே (1921ல் சொன்னது) நிறைவேற்றப்பட்டு வரும் அம்சமாக இருந்துவருகிறது. முழுமையாக இந்தியா அதனை ஏற்குமெனில் சுயராஜ்யம் கிட்டும்

8. ஹிந்த் ஸ்வராஜில் நான் சொன்னதை முழுமையாக நிறைவேற்றினால் தீங்கு என ஏதும் நேராது

9. நாம் எந்த ஏணியின் உதவியைக்கொண்டு மேலே போயிருக்கிறோமோ அந்த ஏணியை உதறித்தள்ளுவது புத்திசாலித்தனமானதல்ல. மரம் ஒரு நாளில் வளர்ந்து விடுவதில்லை. காங்கிரஸ் விதையை போல் உள் அமர்ந்து தன் வேலையை செய்து வருகிறது. நாம் வெளித்தெரியும் மரத்தைக் காண்கிறோம்.

10. முன்னோர்கள் சொன்னதை எல்லாம் ஏற்க வேண்டியதல்ல. மனசாட்சிப்படி நாம் நடந்துகொள்ளலாம். ஆனால் அவர்கள் வேலையை அலட்சியப்படுத்தி சொல்லக்கூடாது.

11. நமக்கு மாறுபட்டவர்கள் தேச விரோதிகள் என்று சொல்வது கெட்ட குணம். இன்னொருவர் எண்ணம் என்பதாலேயே அது கெடுதலானது எனச் சொல்லக்கூடாது

12. நீதியை விரும்புகின்ற நாம் மற்றவர்களிடம் நீதியுடன் நடக்கவேண்டும்

13. பிரச்சனையின் தீர்விற்கு மனுக்கள் மட்டும் போதாது. ஆதரவான மக்கள் பலம் என்கிற திரட்சியும் வேண்டும்

14. திருப்தி கொண்டவர்களை தூண்டுவது கடினமானது. அதிருப்தியும்

அமைதியின்மையும் எந்த சீர்திருத்தம் கொணர்வதற்கும் தேவைப்படுகிற சூழல்கள்

15. சுயராஜ்யம் என்பதை ஆங்கிலேயரை வெளியேற்றுவது என நினைக்கிறோம். ஆங்கிலேயர் இல்லா ஆங்கிலேயர் முறைகள்- புலியில்லா புலியின் குணத்தை வைத்துக்கொள்ள விழைகிறோம். அதே முறைகள்- நிருவாக முறைகள்- நிறுவனங்கள் என்றால் அது இங்கிலிஸ்தானா அல்லது ஹிந்துஸ்தானா?

16. நாடாளுமன்றம் எப்படியிருக்கிறது? சுயநலமிகளின் கூடாரமாக இருக்கிறது. விலை உயர்ந்த பொம்மையது. பேச்சுக்கடையாக இருக்கிறது. பிரதமர் என்பதாலேயே அவர் உயர்ந்த தேசாபிமானியாவதில்லை. அவர் கட்சி நலன், என்கிற கட்சி அபிமானியாகவே செயல்படுகிறார். அங்கு உறுப்பினர்கள் நேர்மைக்கும் மனசாட்சிக்கும் முன்னுரிமை தருவதைவிட கட்சிக்கும் சுய நலத்திற்கும் முன்னுரிமைத் தருகிறார்கள். மக்கள் எப்படியோ அப்படித்தான் அவர்களுக்கான நாடாளுமன்றமும் அமைகிறது.

17. பத்திரிகைகள் எப்படி இருக்கின்றன? மக்களின் குரலை அவர்களின் தேவையை அறிந்து அச்சமின்றி சொல்கின்றனவா? அவை கட்சிகளின் ஊதுகுழலாக இருக்கின்றன. ஒருவரை ஒரு பத்திரிகை சிறப்பாக பேசினால் வேறொன்று இகழ்ந்து பேசுவதைக் காண்கிறோம். கட்சி பேச்சாளர்களிடம் மயங்கி செல்லும் மக்களை மீட்க பத்திரிகைகள் உதவுகின்றனவா?

18. தங்களுக்கு எதிராக தங்களை விமர்சித்து விவாதிக்கக்கூடியவர்கள் இருக்கிறார்களா?

கனவை உண்மையென நம்பி ஒருவித மயக்க நிலையில் மக்கள் ஆழ்த்தப்பட்டிருப்பதைப் பார்க்கிறோம்

19. உடலைப் பேணுதல்- சௌகரியம்- இன்பம் என்பதே இலட்சியமானால் என்னவாகும்? பணத்தாசை , ஆடம்பர வாழ்க்கை என்கிற நோய் பீடித்தால் என்னவாகும்? டாக்டர், வழக்கு என்கிற ஜீவனை அரிக்கக்கூடிய நாகரிக மோகத்தில் கட்டுண்டுள்ளோம்

20. இந்தியா வருந்ததக்க நிலையில் இருக்கிறது. நினைத்தால் கண்ணீர் வருகிறது. நவநாகரிகத்தால் நசுக்கப்பட்டு வருகிறோம். இந்த நவநாகரிகம் என்கிற வியாதி அப்படி ஒன்றும் போக்க முடியாத வியாதியல்ல.

21. இந்தியா மதவிரோதி நாடாகி வருகிறது. கடவுளிலிருந்து விலகி செல்கிறோம். நமது பேராசையை பேரவாவை கட்டுப்படுத்தவே மதங்கள் சொல்கின்றன. மதம் என்கிற பெயரில் நம்மை ஏமாற்றுவோர் மோசமானவர்கள். அந்த மோசடிகள் ஏற்கத் தகுந்ததல்ல. அதே நேரத்தில் மத விஷயங்களில் நம்மை ஏமாற்றுபவர்களைவிட, உலக விவகாரங்களில் நம்மை ஏமாற்றுவோர் இன்னும் மோசமானமார்கள்.

22. மத மூடநம்பிக்கைகள் வேண்டாம். அவை களையப்படவேண்டும். மதத்தை அவமதித்து அதை ஒழிக்க முடியாது. மதித்து நடந்துதான் ஒழிக்க வேண்டும்.

23. இந்தியா ஒரே தேசிய இனமாக இருந்துள்ளது. வாழ்க்கைத் தன்மை ஒரே மாதிரியாகவே இருந்துள்ளது. இயற்கை நிலபரப்பும் அதற்கு உதவியாக இருக்கிறது. அயலார் வருவதால்

தேசியம் பாழ்படாது.

24. மனிதர்கள் எத்தனையோ அத்தனை மதங்கள் இருக்கலாம். தேசிய உணர்ச்சி என்பது மத கோட்பாடுகளில் தலையிடுவது என்பதல்ல.

25. இந்தியாவில் இந்துக்கள் மாத்திரமே இருக்க வேண்டும் என்று இந்துக்கள் நம்பினால் அவர்கள் கனவுலக வாசிகளே

26. இந்து முஸ்லீம் இடையே வேறுபாடுகள் இருக்கலாம். ஆனால் அது உடன் பிறந்த பகை என ஏதும் இருக்க முடியாது. நமது வளர்ச்சிக்கு நாம் பின்பற்றாத மதத்தினருடன் சண்டையிட வேண்டியதில்லை.

27. பசுவை நாம் மதிக்கலாம். பசுவை பாதுகாக்க முஸ்லீமை கொல்வது சரியில்லை. ஒருவர் தன் உயிரை வேண்டுமானால் மாய்த்துக்கொள்ளலாம். சகோதரர் ஒருவர் உயிரை எடுக்கக்கூடாது. இதுவே நமது தர்மம். ஒவ்வொரு இந்துவிற்கும் அகிம்சை மீது நம்பிக்கை இருக்கிறது எனச் சொல்ல முடியுமா?

28. மனிதர்கள் பிடிவாதக்காரர்களானால் நிலைமைகள் சங்கடமாகும். நான் உயர்ந்தவன் என்கிற அகம்பாவம் தீர்க்காது. நான் பணிந்தால் மற்றவரும் பணிவர். பணிந்து போவதில் தவறு ஒன்றும் இல்லை

29. ஒவ்வொருவரும் தங்களுடைய மத தத்துவத்தை நன்கு அறிந்து, போலி போதகர்களுக்கு இடம் கொடுக்காமல் இருந்தால் சண்டை சச்சரவு இருக்காது.

30. சமாதானமாக வாழ இந்து முஸ்லீம் முடிவெடுத்துவிட்டால் மூன்றாமவரான ஆங்கிலேயர் தலையீடு தேவைப்படாது.

31. எல்லோருடைய சரித்திரத்தையும் எழுதுவதாக ஆங்கிலேயர் பாசாங்கு செய்கிறார்கள். அவை நம்மை மயக்குகின்றன. அறியாமையால் அதற்கு பணிகிறோம்.

32. வக்கீல், நீதிபதி, டாக்டர் எல்லாம் தெய்வப்பிறவிகள் என்கிற பாவனை எதற்கு? ஏன் ஆடம்பரம்? தொழிலாளியைவிட எந்த வகையில் இவர்கள் நல்லதைச் செய்கிறார்கள். ஏழைத் தொழிலாளிவிட இவர்களுக்கு இவ்வளவு கட்டணம் ஏன்? அவர்களே அதை முடிவு செய்யும் உரிமையையும் அவர்கள் வைத்திருக்கின்றனர்.

33. இந்தியா உருவாக்கியிருந்த நாகரிகம் இணையற்றது. அனுபவ சோதனைகளில் சரியானவற்றை மாற்ற வேண்டியதில்லை. இங்கு வந்து திணிப்பதையெல்லாம் இந்தியா ஏற்றதில்லை. அதுவே அதன் அழகு.

34. மனிதனுக்கு கடமையின் மார்க்கத்தைக் காட்டும் ஒழுக்கமுறையே நாகரிகம். கடமையும் ஒழுக்கமும் ஒன்றுக்கொன்று பொருத்தமானவை. குஜராத்தியில் நாகரிகம் என்பதற்கு நன்னடத்தை எனப்பொருள்.

35. பணக்காரன் என்றால் எப்போதும் ஆனந்தமாகவும் , ஏழை என்றால் எப்போதும் துக்கமாகவும் இருப்பார்கள் என நினைக்க வேண்டாம். மகிழ்ச்சி என்பது மனநிலை சார்ந்தது.

36. நல்லது நத்தையைப்போல் தான் நகரும். நல்லது செய்பவர் பரபரப்பாக இருக்கவேண்டியதில்லை. தீமைக்கு இறக்கை உண்டு. மக்களிடம் நன்மை தோன்றும்படி செய்திட நாட்கள் பிடிக்கும்.

37. கை கால்களை சரியாக உபயோகிப்பதில்தான் ஆனந்தம் இருக்கிறது. இந்தியாவில் நவநாகரிகம் எட்டாத பகுதிகள் உண்டு. நம்மை பார்த்து அவர்கள் சிரிக்கக்கூடும். நாம் எவர் பெயரால் இவ்வளவு பேசுகிறோமோ அவர்களை அறியோம். அவர்களுக்கும் நம்மை தெரியாது. அவர்கள் நம்மை அறியார்.

38. மனிதன் தன் கை கால்களை கொண்டுசெலுத்தும் அளவிற்குத்தான் தன் நடவடிக்கைகளை கட்டுப்படுத்திக்கொள்ள இயற்கை அவனைப் படைத்துள்ளது. இயங்கும் ஆசைக்கு வரம்பிருக்கிறது. என்னைச் சுற்றியிருப்பவர்க்கு மட்டுமே சேவை செய்யக்கூடிய அளவிற்கு நான் ஆக்கப்பட்டிருக்கிறேன். என் அகந்தையின் காரணமாக என் உடலைக்கொண்டு இப்பிரபஞ்சத்தில் இருக்கும் ஒவ்வொருவருக்கும் சேவை செய்யவேண்டும் என்று பாசாங்கு செய்கிறேன். இவ்வாறு அசாத்தியமானதை செய்துவிட முயலுவதால் மனிதன் தோல்வி அடைகிறான்.

39. இந்திய நாகரிகத்தின் தன்மை ஒழுக்கத்தை உயர்த்துவதேயாகும். நவநாகரிகம் நம்மிடம் ஒழுக்கக்கேட்டை சேர்க்கிறது. நம்மிடம் குறைகள் உண்டு. ஆனால் அவை புராதன நாகரிகம் எனச் சொல்லப்படமுடியாதவை. குறைகளை நீக்க முயற்சிப்போம்.

40. எல்லா நாகரிகங்களும் சோதனையில் தான் இருக்கின்றன. நம்மைப் பொறுத்தவரை நோயின் காரணத்தை நீக்கிவிட்டோமெனில் நோயை நீக்கிவிடலாம்.

41. நாம் மோசமானவர்களாக இருந்தால் அனைவரும் அப்படியே என்கிறோம். நம்

அளவுகோலைக்கொண்டு பிரபஞ்சத்தை அளக்கப் பார்க்கிறோம்.

42. நம்மை நாமே ஆளத்தெரிந்துகொள்வதுதான் சுயராஜ்யம். அது கனவல்ல. ஆயுள் உள்ளவரை ஒவ்வொருவரும் தனக்குத்தானே அனுபவிக்கும் சுயராஜ்யமது. ஆனால் அதற்கு பாடுபடவேண்டும்

43. நாம் நம் வீட்டை சரியாக வைத்துக்கொண்டால், அதில் வசிக்க தகுதியுள்ளவர் மட்டுமே தங்குவர், மற்றவர் போய்விடுவர்.

44. இதுவரை சரித்திரத்தில் நிகழாத ஒன்று எப்பொழுதுமே ஏற்படாது என நம்புவது மனித கண்ணியத்தில் ஏற்படுத்தும் அவநம்பிக்கை. நாம் சரியானது என நினைப்பதை செய்யவேண்டியது நமது பொறுப்பு.

45. இந்தியச் சமூகம் ஆயுதங்களை மேற்கொள்ளக்கூடாது. அப்படி கொள்ளாமல் இருப்பது நல்லது. படுகொலைகள் மூலம் விடுதலை என்பது சாத்தியமில்லை. பிறரைக் கொல்ல நினைப்பதில் வீரமில்லை, கோழைத்தனமது. கொலையின் மூலம் ஆட்சி அதிகாரத்திற்கு வருபவர்களால் மக்களை மகிழ்ச்சியாக வைத்திருக்க முடியாது.

46. மக்கள் பலத்தின் ஆதரவைப்பெறாத முறையீடு பயனற்றது. சமமானவர்களிடத்தில் முறையீடு என்பது கண்ணியத்தின் சின்னம். ஆனால் அடிமையின் முறையீடு அப்படியானதல்ல.

47. லட்சியத்திற்கும் அதை அடைய முயற்சிக்கும் வழிமுறைக்கும் சம்பந்தமில்லை என நினைப்பது தவறு. ஆயுத பலத்தைவிட அன்பு மற்றும் அனுதாபத்தின் சக்தி பெரிது.

மிருகபலத்தில் தீமைதான் உண்டு.

48. அகந்தை சரீரத்தின் வேர் எனில் அன்பு மதத்தின் வேர். அனுதாபத்தை நாம் ஒருபோதும் கைவிட்டு விடக்கூடாது

49. யுத்தம்தான் சரித்திரம் எனில் சரித்திரமில்லா நாடு ஆனந்தமயமானது. மன்னர்கள் போர் என்பதில் ஆத்ம பலம், சாத்வீக எதிர்ப்பை காணமுடியாது. யுத்தம் இருந்தும் உலகம் தொடர்ந்து இருப்பதற்குக் காரணம் அதன் அன்பின் சக்திதான். யுத்தங்களுக்கு இடையே பதிவுபெறாத அந்த அமைதிக்காலம்தான் உண்மையான மக்கள் வரலாறு.

50. துன்பங்களை ஏற்றுக்கொண்டு அதன் மூலம் உரிமைகளைப் பெறுவதே சாத்வீக எதிர்ப்பாகும். மற்றவர்களின் தியாகத்தைவிட தானே தியாகம் செய்துகொள்வது உயர்வானது.

51. சில சட்டங்களை நாம் ஏற்கமுடியாது என்பதற்காக அவர்களின் மண்டைகளை உடைக்கவேண்டாம். நாம் அச்சட்டங்களுக்கு பணிவதில்லை. அதனால் வரும் துன்பங்களை ஏற்பது, தண்டனைகளைத் தாங்குவது என்பதே சாத்வீக எதிர்ப்பாகும்.

52. சாத்வீக எதிர்ப்பாளன் கடவுளுக்கு மட்டுமே அஞ்சக்கூடியவன். வேறு யாருக்கும் அவன் அஞ்சுவதில்லை. கோழையால் எதையும் மீறமுடியாது.

53. பெரும்பான்மைக்கு சிறுபான்மை கட்டுப்படுதல் என்பது கூட ஒருவகை மூடநம்பிக்கைத்தான். பெரும்பான்மை தவறாக கூட இருக்கலாம். சிறுபான்மை சரியாகக்கூட இருக்கலாம். பல சீர்திருத்தங்கள் சிறுபான்மையினரின்

முயற்சியால் தான் உருவாகின.

54. விவசாயிகள் வாளினால் ஒடுக்கப்படமுடியாதவர்கள். அவர்களுக்கு வாளை உருவவும் தெரியாது. சாவுக்கு அஞ்சாதவனை எது பயமுறுத்தும்?

55. கற்புநெறி, எளிமை, சத்தியம், அஞ்சாமை இவை நான்கும் சாத்வீக எதிர்ப்பாளரின் குணங்கள். மனவலிமையில்லாவிடில் ஆன்ம பலமிருக்காது

56. கல்வி என்பது எழுத்தறிவா? ஆங்கிலம் மற்றும் அறிவியலா? படிப்பை நாம் பிரமாதப்படுத்த வேண்டியதில்லை. சேவைக்கு படிப்பு நல்ல கருவியாக இருந்தால் நல்லது. தாய்மொழியில் கற்பது அவசியம். ஆங்கிலத்தில் சிறந்தவற்றை உதவக்கூடியதை எடுத்துக்கொள்ளலாம். அனைத்திற்கும் மேலாக கல்வி என்பது ஒழுக்கத்தை வளர்ப்பதுதான்.

57. இயந்திரங்கள்தான் மேலை நாகரிகத்தின் சாட்சியாக வருகின்றன. நம் மக்களுக்கு பொருத்தமான இயந்திரங்களா அவை என சிந்தித்தல் வேண்டும். அவை ஒழுக்கக்கேடுகளுக்கும் பணத்தாசைக்குமான கருவிகளாக இருக்கின்றன. இங்கு நம் மக்களை அந்நியப்படுத்தாத, அவர்களின் கிராமத் தொழிலை சீரழிக்காத, சுரண்டலுக்கு உட்படுத்தாத இயந்திரங்கள் இருக்கவே செய்கின்றன. நவீன நாகரிக மோகத்தில் சிக்க வேண்டாம்.

58. பேச்சைவிட செயலே சிறந்தது. என்ன எண்ணுகிறோமோ அதைக்கூறி, அதன் விளைவுகளை சமாளிக்க வேண்டியது நம் கடமை. துன்பப்படாமல் உயர்வு வருவதில்லை.

59. ஒரு காரியத்தை மற்றவர்களும் செய்தால்தான் நாமும் செய்வோம் என்பது சோம்பேறித்தன சாக்குப்போக்கு. நாம் சரியென அறிந்ததையே செய்யவேண்டும். மற்றவர்க்கு சரியெனப்படும்போது அதை அவர்கள் செய்வார்கள். ஒன்று ருசியானது என நான் நினைத்தால், மற்றவர் ருசி பார்க்கும்வரை நான் காத்திருப்பதில்லை

60. அவரவர் அவரவர் கடமையை செய்யட்டும். நான் என் கடமையை செய்கிறபோது பிறர்க்கும் சேவை செய்கிறேன். உண்மையான சுயராஜ்யம் சிலர் கையில் குவியும் அதிகாரத்தில் இல்லை. அந்த அதிகாரத்தை எதிர்க்க மக்கள் பெறும் சக்தியில்தான் இருக்கிறது. உண்மையான சுயராஜ்யம் என்பது தன்னை அடக்கி ஆள்வதுதான். தன்னடக்கமாக இருப்பதுதான்.

‘ஆர்யன் பாதை’ என்கிற ஆங்கில இதழ் 1938 செப்டம்பரில் இந்திய சுயராஜ்யம் குறித்த சிறப்பிதழ் ஒன்றைக் கொணர்ந்தது. அதில் பிரடெரிக் ஷோட்ஸ், ஜி டி எச் கோல், ஜான் முர்ரே, ஜெரால்ட் ஹேர்ட், ஜே டி பெர்ஸ்போர்ட், ஹூக் பாஸ்ஸெட், கிளாட் ஹோப்டன், டெலிசில் பர்ன்ஸ், அய்ரின் ரத்போர் ஆகிய அறிஞர்கள் அந்நூல் குறித்து தங்கள் பாராட்டுதல்களை, விமர்சனப்பார்வையை வைத்திருந்தனர்.

மகாதேவ தேசாய் இவர்கள் கருத்துக்களையெல்லாம் உள்வாங்கி தன் கட்டுரை ஒன்றையும் இதில் வழங்கியிருந்தார். காந்தி தன் செய்தியை தந்திருந்தார். முப்பதாண்டுகள் அனுபவத்தில் சந்தித்த சோதனைகள் தான் எழுதிய எதையும் மாற்றத் தேவையில்லை என்பதையே தனக்கு உணர்த்துவதாக காந்தி அதில் சொல்லியிருப்பார். எனது மறைந்த நண்பன்

‘அனார்க்கிஸ்ட்’ சிந்தனையுடன் என்னை முட்டாள் என்றார். ஆனால் இதை வாசிக்கக்கூடியவர் சமநிலையுடன் வாசிக்கலாம் எனவும் அவர் தெரிவித்தார்.

பிரடெரிக், இந்த உலகை மாற்ற விரும்பும் ஒவ்வொருவரும் இந்நூலை படிக்க வேண்டும் என்றார். இந்நூல் அரசியல் வெற்றியைப் பெறலாம். ஆனால் அதில் இன உணர்வு வெளிப்படுகிறதென்கிற விமர்சனத்தையும் பிரடெரிக் வைத்தார்.

புகழ் வாய்ந்த பாபியன் சிந்தனையாளரான கோல் அவர்கள் மிகவும் தொந்தரவு செய்திடும் பிரதி என்றார். காந்தி இயந்திரம் மற்றும் மேலை நாகரிகம் பற்றி சொல்லக்கூடியதை முழுமையாக ஏற்க முடியாவிட்டாலும், நாமும் கொடுமைக்காரர்களாக வளர்ந்துள்ளோம் என்பதை ஏற்க வேண்டும். நான் காந்தியர் அல்ல. காந்தியும் மேலை நாட்டுக்கு தலைவராக முடியாமல் போகலாம். ஆனால் அவர் தியாகியாகிவிடுவார். நமது மேலை நாகரிகம் தவறு என்றால் அழிந்து விடும். நாம் நம் வேர்களிலிருந்தே நம்மை மீட்டுக்கொள்ளவேண்டும் என்று கோல் எழுதினார்.

டெலிசில் பர்ன்ஸ் காந்தி மனிதர்களிடையே காணப்படும் இனம், மதம், பாலினம், அரசியல் எல்லாவற்றையும்விட, அவனின் சரி தவறு, நியாய அநியாயம், நல்லவை தீயவை ஆகியனதான் அடிப்படையானவை எனச் சொல்லித்தருகிறார் என எழுதினார். மானுடத்தின் ஒரு பகுதி ஹிட்லர்போல மனித சித்ரவதைக் கூடங்களை கட்டினால், அங்கு பேச்சுவார்த்தை- பிறர் மனதை ஏற்க வைத்தல் என்றெல்லாம் நின்று போய்விடுகிறது என எழுதினார். காந்தி குரோபோட்கின் பரஸ்பர உதவி போல ஆன்ம பலம் என்கிற ஒன்றை சொல்கிறார்.

அவரது இயந்திரம் குறித்த பார்வையை ஏற்க முடியவில்லை என அவர் விமர்சிப்பதைக் காண்கிறோம்.

மில்டன் முர்ரே இந்தப் புத்தகம் மகத்தானது என்பதை ஏற்றாலும், இயந்திரம் பற்றிய காந்தியின் கருத்தை ஏற்கவில்லை. சத்தியாகிரகத்திற்கான ஆன்ம பலம் பெறமுடியுமானால் இயந்திரங்களை கட்டுப்படுத்த பலமிருக்காதா என அவர் விமர்சித்தார். நவீன உலகின் கிறிஸ்துவ ஆசான் காந்தி என ஏற்கலாம் என்றார் முர்ரே.

பெரஸ்போர்ட் காந்தி ஆங்கிலேயரை வெறுக்கவில்லை. புரட்சி என்றும் பேசவில்லை என்றார். இயந்திரம் என்கிற தவறான கடவுள் ஏன் என்றார் காந்தி என்றார்.

ஹூக் மிக முக்கிய கையேடு இந்த நூல் என்றார். பெரும் புரட்சிவாதியாக அவர் காந்தியைக் கண்டார். தீவிரமாக நாம் சிந்தித்தால், சில கால அனுபவத்தில் அவர் சொல்வது தான் சரியோ என நாம் வரவேண்டியிருக்கும் என்றார்.

கிளாட் எழுதும்போது இங்கிலாந்து தான் புதிய நாகரிகத்தின் விடிவெள்ளி எனக் கருதலாம். காந்திக்கோ இங்கிலாந்தின் நிலை பரிதாபமானதாகத் தெரிகிறது என்றார். செயல்களுக்கு அவரவரர் பொறுப்பேற்க வேண்டும் என்பதை காந்தி வற்புறுத்துகிறார். சாக்குபோக்கு வேண்டாம் எனச் சொல்லித்தருகிறார் என்கிறார் கிளாட்.

ஜெரால் ஹேர்ட் இந்நூலை ரூசோவின் சமுதாய ஒப்பந்தம் மார்க்சின் காபிடலுக்கு இணையானதென்றார். ரத்போர் காந்தி பேசும் சாத்விக எதிர்ப்பு நடைமுறையில் அவ்வளவு சுலப ஒன்றல்ல என்றார்.

விமர்சனங்களுக்கு பதில் அளிக்கும் வகையில் மகாதேவ தேசாய் கட்டுரை அமைந்ததைக் காண்கிறோம். காந்தி அவசர அவசரமாக எழுதியதால் சற்று நடையில் தீவிரம் இருக்கலாம். அவர் தன் அடிப்படை கருத்துக்களை சரி என இன்றும் கருதினாலும், தொடர்ந்து தவறான புரிதல்களை களைந்திட வளப்படுத்திக்கொண்டேயிருக்கிறார்.

2009ல் ஹிந்த் ஸ்வராஜ் நூற்றாண்டு தருணத்தில் மூன்று நூல்கள் வந்தன. அந்தோணி பரேலின் முன்னுரையுடன், சிபி ஜோசப் எடிட் செய்த காந்தி பீஸ் பவுண்டேஷன் சார்பிலான கட்டுரைத்தொகுப்பு, தேசிய காந்தி அருங்காட்சியகம் கொணர்ந்த ஹிந்த் ஸ்வராஜ் பற்றி தொடர்ந்து காந்தி பேசிய தொகுப்பு என்கிற மூன்றும் குறிப்பிடத்தகுந்தவை. 2022ல் ராஜிவ் பர்கவா எடிட் செய்து கொணர்ந்த கட்டுரைத்தொகுப்பு மிக ஆழமான ஒன்று.

அந்தோணி பரேல் தனது முன்னுரையில் ஹிந்த் ஸ்வராஜ் உருவான சூழல் தொடர்ந்து ஏற்படுத்தி வருகிற தாக்கம் குறித்து விரிவாக பேசியிருக்கிறார். இன்றும் தொடர்ந்து குறிப்புதவிக்கான முன்னுரையாக அதை பாவிக்கலாம்.

சிபி ஜோசப் தொகுப்பில் சந்திரசேகர் தர்மாதிகாரி, ரேணு, ராம்தாஸ் பட்கல், சதீஷ் ஜெயின், ஆனந்த் லோகானி, லூயிஸ் காம்பனா, அந்தோணி டிராகோ, விஜயன், கௌளல், கோல்கே. சிபி, பிரதான், எடியன் ஆகியோர்களின் 13 கட்டுரைகள் ‘ஹிந்த் ஸ்வராஜ்’ குறித்து பல்வேறு கோணங்களில் பேசுவதைப் பார்க்கலாம்.

ராஜிவ் பர்கவா தொகுப்பு சமீபத்தில் வந்த ஒன்று. இதில் அந்தோணி பரேல், ருடோல்ப், அஜாய் ஸ்காரியா, பில்கிராமி, நந்த கிஷோர், சதீஷ் ஜெயின், ராஜ்மோகன் காந்தி, பிரெட் டெல்மாயிர், உதய் மேத்தா,

ஜெர்மி வெபர், போவெண்டுரா, மாயாராம், ஜோசப், ஹெக்டே, லூசி , சுதிர், சுக்ருத் போன்றவர்களின் 19 கட்டுரைகள் நான்கு பெரும் பிரிவுகளில் இடம் பெற்றுள்ளன, சாம்ராஜ்யம், நவீனம்- காலனிய மனம்- சுயம் செதுக்கல் , அரசியல்- வன்முறை போன்ற அம்சங்களை அக்கட்டுரைகள் விவாதிப்பதைக் காணலாம்.

காந்தி அருங்காட்சியக தொகுப்பில் 78 இடங்களில் 1910-1947 வரை காந்தி ஹிந்த் ஸ்வராஜ் குறித்து என்ன தெரிவித்தார் என்பதைக் காணலாம். இந்த தொகுப்பிலும், பரேல் முன்னுரை தொகுப்பிலும் இயந்திரங்கள் குறித்து அவர் எப்படியெல்லாம் விளக்கம் கொடுத்து வந்தார் என்கிற வளர்திசை சிந்தனையைக் காண்கிறோம். அதேபோல் 1921லேயே அவர் நாடாளுமன்ற ஜனநாயகத்திற்காக மக்களும் காங்கிரஸ் தலைமையும் நிற்பதை உணர்ந்து, அகிம்சையை மட்டும் தொடர்ந்து வற்புறுத்துவராக நடந்துகொண்டார். தன்னளவில் ஹிந்த் ஸ்வராஜில் பேசிய அனைத்திற்குமான சுய சோதனைகளை அவர் விடாமல் இருந்தார்.

இலட்சியம் என்பது அடைவதில் இல்லை. அதற்கான இடைவிடாத நேர்மையான சரியான வழிமுறைகளில் நாம் செய்யும் செயல் ஈடுபாடே மிக முக்கியம் எனப் பேசினார் காந்தி. இலட்சியம் என்பது நாம் நெருங்க நெருங்க அது தள்ளிப் போய்க்கொண்டேயிருக்கும். எட்டியது எதுவும் இலட்சியமாக தொடராது என்கிற சிந்தனை தெறிப்பை அவர் நல்கினார்.

நெறியை விட்டுவிடாதே- வன்முறையை நாடாதே என்பதை அழுத்தமாக சொல்லி வந்தார். அவர் மகன்லாலுக்கு 1910 ஏப்ரல் 2ல் எழுதிய கடிதத்தில் அறிவுறுத்தியது நம் எல்லோருக்கமான ஒன்றே. இந்தியாவை விடுவிக்க வேண்டும் என்கிற பெரும்

பாரத்தை மண்டையில் ஏற்றிக்கொள்ளாதே. உன்னை விடுவித்துக்கொண்டு தேறப்பார்- அப்படி ஒவ்வொருவர் உய்வதும், தேர்ச்சியும் இந்தியாவை தேறவைக்கும் உயர்த்தும் என்றார்.

காந்தியின் வரிகளிலேயே அவர் சாரமாக நேருவிடம் 1945ல் கடிதம் மூலம் சொன்னதைப் பார்ப்போம்

The sum and substance of what I want to say is that the individual person should have control over the things that area neceary for the sustenance of life. If he cannot have such control the individual cannot survive. My ideal village still exists only in my dreams and imagination.

சுயராஜ்யம் என்பது தன்னைக் கட்டுதல் என அவர் சொல்லித் தந்தார். காந்திக்கு முன்னரும் பின்னரும் சுயராஜ்யம் குறித்து பலர் பேசியே இருந்தனர். அனைவரும் ஆட்சி மாற்றம்- பிரிட்டிஷ் அதிகாரம் எவர் கையில் என்கிற சிந்தனைகளையே வெளிப்படுத்துபவராக இருந்தனர். காந்தி எவர் கையில் ஆட்சி என்பதைவிட, தனிநபர் என்கிற அந்த சிறு அலகின் நேர்த்தியே- அதன் கடமைக்கான விழிப்பே, அதன் ஒழுக்க நெறிப் பாதையே சுயராஜ்ய திறப்பென்றார். அவர் இன்னும் நமக்காக அவரின் சுயராஜ்ய கதவைத் திறந்தே வைத்திருக்கிறார்.

21ஆம் நூற்றாண்டின் பிரச்சனைகளையும் ஹிந்த் ஸ்வராஜ் வெளிச்சத்தில் பார்க்க இயலும் என அறிஞர் பலரும் பேசுவதைப் பார்க்கமுடியும். பேராசை எனும் கொடிய நோயிலிருந்து உலகோரை - நம்மை மீட்கும் பிரதியது. உழைப்பவர் மீதான் அலட்சியம், சுரண்டி கொழுக்கும் பணம் சொத்து பேராசை, மனித உறவுகளை சுயநலம் சார்ந்த பண உறவுகளாக்குதல், பெண் – தலித் மற்றும் அதிகாரமற்றோர் மீதான வன்முறை, போலிசாமியார்கள், மதமோதல், கடவுளை வைத்து

வியாபாரம், பொருளாதாரத்தில் பெரும் ஏற்றத்தாழ்வான முறைகள், வேலையின்மை, ஒழுக்க சிதறல்- வீழ்ச்சி, போர்களின் அழிவுகள் போன்ற ஏராள பிரச்சனைகளுக்கு பெருந்தொழில் நவீன முதலாளித்துவ வாழ்க்கை முறையிடம் நியாயம் கிட்டவில்லை. இதை அனைவரும் உணர்ந்தாலும் அப்பாதையை கைவிட நாம் தயாராக இல்லா சூழல்தான் நிலவுகிறது. 'ஹிந்த ஸ்வராஜில்' காந்தி எச்சரித்ததை நாம் செய்த அலட்சியத்தின் விளைவுகள் இவை என்ற உணர்வும் நம்மிடம் அறவேயில்லை. அதிகாரத்தில் என் பங்கு என்ன , எனக்கான இடம் என்ன என்கிற வெறித்தன ஓட்டத்தில் மோதிக்கொள்கிறோம்.

நாம் எந்த கட்சி ஆட்சி என்கிற பெரும் சத்தமான பேச்சுக்களில், சன்னமான காந்தியின் குரலை தவற விட்டுக்கொண்டிருக்கிறோம். ஹிந்த் ஸ்வராஜ் வாசிப்பில் அந்தக் குரல் தோழமையுடன் நம் மத்தியில் உரையாட எப்போதும் தயாரக இருப்பதை உணரலாம். எவர் எப்படியானாலும் நாம் இப்படித்தான், அதுவே இந்தியா உய்ய உதவும் சாலை என்கிற பெரும் விழிப்பை 'ஹிந்த் ஸ்வராஜ்' கொடுக்கத் தயாரக இருக்கிறது. நம் ஒவ்வொருவரையும் எதிர்பார்த்து நூற்றாண்டைக் கடந்தும் பொறுமையுடன் நிற்கிறது.

பின் குறிப்பு:

காந்தி கல்வி நிலையத்தில் அக்டோபர் 2 2024 காந்தி ஜெயந்தி அன்று இந்திய சுயராஜ்யம் பற்றி ஆற்றிய உரையின் காணொளி இணைப்பு

https://www.youtube.com/watch?v=sWE77G4oeis

ஜூன் 13 2022 எழுதியதிலிருந்து:

… **Kaniyam Foundation Account Number : 606 1010 100 502 79 Union Bank Of India West Tambaram, Chennai IFSC – UBIN0560618 Account Type : Current Account**

# காந்தியின் ஹிந்த் சுயராஜ் – சில மூலக்கூறுகள்

காந்தியடிகளின் 1909 லண்டன் பயணம் சரியான முடிவுகளை தீர்வுகளை எட்ட அவருக்கு உதவாமல் போனது. நவம்பர் 1909ல் தென்னாப்பிரிக்கா திரும்புவதற்கான பயண ஏற்பாடுகள் செய்யப்பட்டன. கப்பல் பயணத்தில் இன்றும் புகழ் வாய்ந்ததாக விரிவான விவாத திறப்புகளை தன்னளவில் வைத்துக்கொண்டிருக்கும் அவரது ஆக்கமான 'ஹிந்த் ஸ்வராஜ்- இந்திய சுயராஜ்யம்' எழுதப்பட்டதை அனைவரும் அறிவோம்.

கப்பல் பயணம் என்றாலும் தனது வேலைகளை விடாது செய்பவர் காந்தி. டால்ஸ்டாயின் 'Letter to The Hindu' வை அவர் குஜராத்தியில் மொழிபெயர்க்கிறார். டால்ய்டாய் அவர்களால் தாரக்நாத் தாஸ் எனும் இளைஞருக்கு எழுதப்பட்ட பதில் தான் அக்கடிதம். தாரக்நாத் தாஸ் வான்கூவரில் வசித்தவர். ஃப்ரி ஹிந்துஸ்தான் என்கிற புரட்சிகர பத்திரிகை ஒன்றை அப்போது நடத்தி வந்தார் தாரக்.

பிரிட்டிஷ் ஆட்சியை தூக்கி எறியும் உரிமை இந்தியர்களுக்கு இருக்கிறது என்பதையும் அதற்காக ஆயுதம் தாங்கிய கிளர்ச்சி அவசியமாகிறது என்கிற வாதத்தை முன்வைத்து தாஸ் எழுதிய கடிதத்திற்கு டால்ஸ்டாய் பதில் எழுதியிருந்தார். ஒயின் வியாபாரி விற்கிறார் என்பதற்காக அதை வாங்கி குடித்துவிட்டு

வியாபாரியை மட்டும் குறை சொல்வது ஏற்கத்தகுந்ததா? தங்களை அடிமையாக்கும் சூழலை இந்தியர்களே உருவாக்கிக்கொண்டனர். ஆயுதங்களைவிட சிறந்த கருவி ஒத்துழையாமையே என அந்த இந்துவிற்கு டால்ஸ்டாய் எழுதியிருந்தார்.

இதைப்படித்த காந்தியால் எப்படி ஏற்காமல் அதைக்கொண்டாடாமல் இருக்கமுடியும். அதை வெளியிடுவதற்கான அனுமதியுடன் ‘அவதாரம்’ குறித்த டால்ஸ்டாயின் வரிகளை விலக்கிவிட்டு பிரசுரம் செய்வதற்கான ஒப்புதலையும் காந்தி கடிதம் மூலம் டால்ஸ்டாயிடம் கேட்டிருந்தார். டால்ஸ்டாய்க்கு அந்தப்பதமான ‘reincarnation’ அப்படியே இருக்கலாம் என்ற எண்ணம் இருந்தாலும் காந்தியின் விருப்பத்தை மறுக்காமல் ஒப்புதல் அளித்திருந்தார்.

கப்பலில் குஜராத்தி மொழி பெயர்ப்பு என்ற வேலையுடன் மேலே குறிப்பிட்ட ‘இந்திய சுயராஜ்யம்’ எனும் புத்தகம் எழுதும் வேலையையும் காந்தி செய்தார். ஒன்பதே நாட்களில் தனது கையெழுத்தில் 271 பக்க அளவில் — வலது கை வலித்தால் இடதுகையால் என காந்தி எழுதி முடித்தார். சுமார் 50 பக்கங்களாவது இடதுகை வேலைப்பாட்டுக்குரியதாக இருந்தன.

இந்திய சுயராஜ்யத்தை விறுவிறுவென அவர் தங்கு தடையின்றி எழுதிமுடித்தார் என்பதும் பரவலாக பலர் அறிந்த செய்தி. அவர் மனதில் அலைமோதிய பல விவாதங்கள் அடங்கி தெளிவை அவருக்கு வழங்கிய நிலையில் அந்த ஆக்கம் ‘டயலாக்’ எனும் வகைப்பட்டு உருவாக்கப்பட்டிருந்தது.

வன்முறைவழி உகந்ததா? மேற்கு நாகரீகம் என்பது கிழக்குடன் சந்திக்காதா? அப்படி ஒரு சந்திப்பு புள்ளி வரலாறு நெடுக இருந்ததேயில்லையா? இந்தியா போன்ற கிழக்கு

நாடுகள் உய்த்தேற மேற்கின் பொருளாயத முன்வைப்பு நாகரீகம் மட்டும் தான் உகந்த வழியா ? மேற்கின் உருவாக்கம் தீமைகளை தரவில்லையா? அப்படியாயின் எவை அவை? வாருங்கள் விவாதிப்போம் என்றே காந்தி அதில் அழைத்திருப்பார்.

காந்திக்கு இந்திய மூலங்களிலிலும், மேற்கின் பொருளயதவாத மறுப்பை முன்வைத்து மாற்று உரையாடல்களை எழுப்பிய மரபின் மூலங்களிலும் நாட்டம் இருந்தது. தன் சிந்தனைக்கான முன் தேவைகளாக அவற்றையே அவர் எடுத்துக்கொண்டார். எனவே மேற்கின் ஏதோவொருவகையை அதை எதிர்க்கிறோம் என்ற பெயரில் எடுத்துக்கொள்ளும் இந்தியர்களிடம் அவர் உரையாட வேண்டியிருந்தது. மேற்கே உலகின் நாகரீக திறப்பிற்கான வழி என அதிகாரங்களை எடுத்துக்கொண்டு பிறரை நாகரீகப்படுத்தும் இறை கடமை தங்களுக்கானது என சுய நியமனம் செய்துகொண்ட மேற்குலக அதிகாரம் குறித்தும் அவர் உரையாட வேண்டியிருந்தது.

லண்டன் ‘இந்தியா இல்லம்’ வாழ் மாணவர்கள் ஷ்யாம்ஜி கிருஷ்ணவர்மா பொருளாதார ஆதரவில், சாவர்க்கரின் தேசபக்த உணர்ச்சி ஊட்டலில் இருந்தனர். அப்படி இரையானவர்களில் ஒருவரான மதன்லால் திங்க்ரா பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் சார்ந்த சர் கர்சான் வைலியை காந்தி லண்டன் வரும் அந்த ஜூலை 1909 சூழலில் படுகொலை செய்திருந்தார். கைது, வழக்கு முடிந்து ஒரே மாதத்தில் திங்க்ரா தூக்கில் ஏற்றப்பட்டு இந்திய விடுதலைக்கான தியாகியாகிறார்.

காந்தியைப் பொறுத்தவரை திங்க்ரா அப்பாவி. செய்வதின் தன்மையை அறியாமல் தவறான செயலுக்கு தன் உடலை அர்ப்பணித்தவர். அவரை

அந்த வெறித்தன மயக்கத்தில் ஆழ்த்தியது எது என்பதே காந்திக்கு முக்கியமானதாகப்பட்டது. இப்படிப்பட்ட எண்ணங்கள் விதைக்கப்பட்டு அவர்களை intoxicationக்கு அழைத்துச் சென்ற சிந்தனையுடன் அவர் உரையாட முயற்சித்தார்.

காந்தியும் சாவர்க்கரும் இணைந்து கூட்டம் பேசவேண்டிய தசரா விழாச் சூழல் அக்டோபர் 24, 1909ல் உருவானது. காந்தி ராமனின் கல்யாண குணங்களை வர்ணித்து ராவண வீழ்ச்சி சாத்தியமானதை உயர்த்திப்பிடிக்கிறார். கடமை, நிதானம், பொறுமை, அஞ்சாமை, அமைதியும் கனிவும் எனும் ராமனின் குணங்களை வரித்துக்கொண்டு பிரிட்டிஷ் வீழ்ச்சியை உருவாக்க முயற்சிப்போம் என்கிறார். சாவர்க்கரோ ராமனுக்கு முன்னரான தசரா நாட்கள் பத்து கரங்களிலும் ஆயுதம் ஏந்திய துர்க்கைக்கானது. மீட்சி துர்க்கா வழியில் என்கிறார். வன்முறை ஆயுத வழியா - துன்பங்களை அஞ்சாமல் ஏற்று அமைதிவழியில் உறுதியாக நின்று தீர்வா? எது வழி எனும் உரையாடல் பெருக்கப்பட வேண்டிய அவசியத்தை காந்தி உணர்கிறார்.

அடுத்து அவருக்கு ஏற்பட்ட மற்றொரு வாய்ப்பில் தனது confeion of faith 1909 என்பதை அவர் தெளிவுபடுத்துகிறார். நண்பர்கள் சந்திப்பு இல்லத்தில் கூட்டம் ஒன்றிற்காக காந்தி லண்டனில் அழைக்கப்படுகிறார். அழைப்பை தந்தவர்கள் Hampstead Peace and Arbitration Society பொறுப்பாளர்கள். தலைப்பு கிழக்கும் மேற்கும் எனத் தரப்பட்டிருந்தது.

காந்தியிடம் டால்ஸ்டாயின் இந்துக்கு கடிதம் மனதில் படிந்திருந்தது. தவிரவும் ஜி.கே செஸ்டர்டன் அவர்களின் பதிவொன்றும் அவரிடம் செல்வாக்குடன் நிலைத்தது. இந்தியன் சோசியாலஜி பத்திரிகையை ஹெர்பர்ட் ஸ்பென்சர் செல்வாக்கில்

ஷ்யாம்ஜி நடத்திக்கொண்டிருந்தார். அந்தப்பத்திரிகை எழுத்துக்களைப் பார்த்து அந்த இந்தியர்களின் புரிதலுக்கு எதிர்வினையைத்தான் செஸ்டர்டன் தன் கட்டுரை ஒன்றில் தந்திருந்தார்.

செஸ்டர்டன் கட்டுரை இல்லஸ்ட்ரேட்டட் வீக்லி லண்டன் இதழில் 1909 செப்டம்பரில் வந்திருந்தது. காந்தி அதை முழுமையாகப் படித்தார். செஸ்டர்டன் இந்தியர்கள் தங்களுக்கு விடுதலை வேண்டும் எனக்கோரி வருகிறார்கள். ஆனால் சுதந்திரம் என்றால் என்னவென்று அறியாமலேயே கேட்கிறார்கள். இந்தியர் தேசியம் பேசுவதில் இந்தியனும் இல்லை தேசியமும் இல்லை. அடிமைப்படுத்திய பிரிட்டிஷாரிடம் அவர்கள் என்ன கோருகிறார்கள். நீங்கள் ஏற்படுத்திய நிறுவனங்களை எங்களிடம் தாருங்கள். நாங்கள் மந்திரியாகிறோம்- பிரதமர் ஆகிறோம். ஓட்டுப்பெட்டியை வைப்பீர் என்கிறார்கள். எங்கள் பட்ஜெட்டை நாங்கள் போடும் சுவர்க்க உரிமை வேண்டும் என்கிறார்கள். அந்த இங்கிலீஷ் பேப்பரை நாங்கள் நடத்திக்கொள்கிறோம் எனவும் அவர்கள் பேசுவதைக் காண்கிறோம்.

இந்தியர் இப்படி பேசினால் அது உகந்ததாக இருக்கும்: வெள்ளையர்களிடமிருந்து அவர்கள் செயலிலிருந்து எங்களுக்கு தேவை ஏதுமில்லை. எங்கள் தவறுகளுடன் எங்களுக்கானதில் நாங்கள் வேலை செய்யமுடியும். நூறு ராஜாக்களில் எங்கள் குழந்தைகளைப் பற்றி, எங்கள் அன்றாட உணவைப் பற்றி கவலைப்பட ஒரு ராஜா இருந்தாலும் அவர்தான் எங்களுக்கு முக்கியமானவர். எங்களுக்கு மதம் முக்கியனானது. எங்கள் வழியில் நாங்கள் செல்வதை நீங்கள் விரும்பவில்லை என்பது சரியானதல்ல. எங்களை விட்டு விலகுங்கள்- இப்படி இந்தியர் யோசிக்கலாமே என்பதை செஸ்டர்டன் எழுதியிருந்தார்.

மேற்சொன்ன 'நண்பர்கள் சந்திப்பு' கூட்டத்தில் தான் காந்தி confeion of faith என்பதை விநியோகிக்கிறார். கிழக்கும் மேற்கும் சந்திக்க முடியாத இறுக்கம் என ஏதுமில்லை. இன்றைய தொழில்நுட்ப சமூகத்திற்கு முன்பிருந்த மேற்கு கிழக்கைப்போல்தான் இருந்தது. இன்று இந்தியாவில் நடப்பது பிரிட்டிஷ் ஆட்சி என்பதைவிட 'modern civilization rules' என்றே சொல்லவேண்டும். விடுதலை இந்தியாவில் இதே போன்ற ஆட்சிதான் என்றால் பிரிட்டனுக்கு ஓடும் பணத்தை தடுப்பது என்பதை தவிர வேறு ஏதுமில்லை என்றே பொருள். மேற்கு தான் நினைத்துகொண்டிருக்கும் பொருளாயத முன்வைப்பு நாகரீகத்திலிருந்து தன்னை மீட்டுக்கொண்டால் அதன் கிழக்குடன் ஆன கைகுலுக்கல் சாத்தியமே. உங்களது 'material comforts ஆல் moral growthயை' உருவாக்க இயலாது.

இந்தியாவின் மீட்சிக்கு பிரிட்டிஷாரிடம் கடந்த 50 ஆண்டுகளாக கற்ற சிலவற்றை unlearn செய்யவேண்டியது அவசியமாகிறது. பொருளாயத நலன்களை சுருக்க கற்கும் சமூகம் உய்யும் என்பதை மேற்கு உணரட்டும். இவைதான் அந்த confeion of faithன் சாரம்.

சாவர்க்கர் விவாதம், அனார்க்கிஸ்ட்கள் உரையாடல், டால்ஸ்டாயின் இந்து கடிதம், செஸ்டர்டன் கட்டுரை போன்ற சில நிகழ்வுகள் காந்தியை அவரின் 'நம்பிக்கை ஒப்புதல் வாக்குமூலம்' நோக்கி அவரை அழைத்துச் சென்றது. இந்திய சுயராஜ்யம் எழுத அவர் மனம் தயாரானது . ஏற்பட்ட சிந்தை தெளிவால் எழுத்தும் தடங்கலின்றி வெளிப்பட்டது. இந்தியாவில் மட்டுமின்றி உலகின் பலரிடத்தும் 110 ஆண்டுகளைக் கடந்தும் செல்வாக்கு செலுத்தும் ஆக்கமாக இந்திய சுயராஜ்யம் இருக்கிறதென சொன்னால் அது மிகையாகாது.

13-6-2022

nov 19, 2016ல் எழுதியதிலிருந்து:

UR அனந்தமூர்த்தி அவர்களின் Hindutva or Hind Swaraj படித்தவுடன் சாவர்க்கரின் Eentials Of Hindutaவாவையும் - காந்தியின் Hind Swaraj or Indian Home Ruleயையும் திரும்ப படிக்கவேண்டும் என்ற உந்துதல் அதிகமானது. காந்தியின் புத்தகம் குறித்த உரையாடலை தோழர் சீனிவாசன் சில ஆண்டுகளுக்கு முன்னர் செய்தபோது அதை படித்து விட்டு விட்டுவிட்டேன். தோழர் சீனிவாசன் மதுரை BSNLல் பணிபுரிந்தவர். ஜெகன்மீது அளவற்ற மதிப்பு கொண்டவர். படிக்கிற ஆர்வம் மிகுந்தவர். ஜெகனுக்கு காந்தி நிறுவனங்களில் மேடை அமைத்துக் கொடுத்தவர். ஆடிட்டர் குருமூர்த்தி போன்றவர்களிடம் நெருக்கமான தொடர்புகளை பெற்றிருந்தவர். மதுரைக்கு டெலிகாம் கூட்டங்களுக்கு செல்லும்போது என்னிடம் சில rare குறிப்புகளை அனுப்புகிறேன் படித்துப் பாருங்கள் என சொல்லி வந்தவர். ஆய்வுபணிகளுக்காக இலாகா வேலையிலிருந்து விடுவித்துக் கொண்டவர். சாஸ்த்ரா பல்கலைக்கழகத்தில் பின்னர் கௌரவ பேராசிரியராக சேர்ந்தார். அவ்வாறு இருந்தபோது ஒருமுறை சாஸ்த்ரா மாணவர்களிடம் பேசுவதற்கு எனக்குக் கூட வாய்ப்பை உருவாக்கினார். அவருக்கு இந்நேரத்தில் எனது நன்றி.

வீர சாவர்க்கரின் புத்தகத்தை படித்தேன். பலமுறை விவாதிக்கப்பட்ட புத்தகம். அவரின் “1857 முதல் சுதந்திரப்போர்” பலமுறை பேசப்பட்ட புத்தகம் பகத்சிங் போன்றவர்கள் அவரை சந்தித்து வெளியிட அனுமதி பெற்ற புத்தகம். சாவர்க்கர் ஆதரவு- எதிர்ப்பு- கண்டன உரையாடல்கள் தொடர்ந்து இந்தியாவில் நடந்து கொண்டிருக்கிறது. மாபெரும் புரட்சியாளர் என அவரை உயர்த்திய எழுத்துக்களும்

ஒரு பயந்த ஆட்டை சிங்கமாக காட்டும் எத்தனம் என்ற விமர்சனமும் பெரிதாக நடந்து வருகிறது.

சாதிகளுக்கு அப்பால் சீக்கியர் உட்பட அனைவரும் - வேதங்களின் தாயகமான இந்தியாவை புனிதபூமியாக கருதும் அனைவரும் நிவேதிதா, அன்னிபெசண்ட் போன்றோர் உட்பட- அனைத்து மத(அனுஷ்டான) நடைமுறை சார்ந்த வேறுபடுகளையும் மூடிவைத்துவிட்டு - இந்துத்வா என ஒன்றுபடவேண்டும். இதற்கான போர்க்குணம் மெச்சப்படவேண்டும் என்ற முறையில் அவரது புத்தகம் தனது விவாதத்தை வைக்கிறது.

சாவர்க்கர் காந்தி கொலைவழக்கு உள்ளிட்ட பல முரண்களில் சிக்கியவர். கோட்சேவின் மதிப்பை பெற்றவர். தனது புரட்சிகர ஆரம்ப ஆண்டுகளில் அந்தமான் சிறையில் தனது சகோதரருடன் வதைபட்டு அரசியலில் ஈடுபடமாட்டேன் என்ற உறுதிமொழியை தந்து ரத்னகிரியில் தங்கியவர். இந்நிகழ்வை பக்த்சிங் வீரத்துடன் ஒப்பிட்டு சாவர்க்கரை விமர்சித்து ஏராளம் எழுதப்பட்டுள்ளது. லண்டனில் பிரான்சில் புரட்சிகர நடவடிக்கைகளில் ஈடுபட்டு கப்பலில் வரும்போது தப்ப முயற்சித்து கைதாகி அந்தமான் அனுப்பப்பட்டவர். மேடம் காமா, வ வேசு அய்யர், மதன்லால் திங்க்ரா, விரேந்திரநாத் சட்டோபத்யாய் ஆகிய புரட்சியாளர்களுடன் செயல்பட்டவர். இத்தாலியின் மாஜினியால் கவரப்பட்டவர். ருஷ்ய புரட்சியாளர் அனார்க்கிஸ்ட் குரொபட்கின் அவர்களை தனது செயல்களுக்கு மேற்கோள் காட்டியவர்.

ஷ்யாமஜி கிருஷ்ணவர்மா என்கிற புரட்சியாளர் நடத்தி வந்த Indian Sociologist பத்திரிக்கை தொடர்பை வைத்திருந்தவர். மதன்லால் திங்க்ரா லண்டனில் செய்திட்ட கர்சான் வைல்லி படுகொலை வழக்கிலும் சாவர்க்கர் சிக்கியவர். இந்த படுகொலையை மிதவாத

தலைவர் சுரேந்திரபானர்ஜியும், தீவிரத்தலைமை பிபின் சந்திரபாலும் விமர்சித்தனர். ஆனாலும் சாவர்க்கர் தங்க பிபின்பால் இடமளித்தார் புரட்சியாளர்கள் தங்கிய இந்தியன் ஹவுஸ் துப்பாக்கிகள், வெடிமருந்துகளின் ரகசிய இடமாகவும் -இருந்த இடமாகவும் ஆக்கப்பட்டது, காந்தி அங்கு சென்று ஒருமுறை அந்த இளைஞர்களுடன் விவாதித்துள்ளார்.

சாவர்க்கர் அனுப்பிய துப்பாக்கிகள் திலகர் , வீரவாஞ்சிவரை வந்ததாக சாவர்க்கர் ஆதரவாளர்கள் பேசிவருகின்றனர். பாரதிதாசன் மூலம் வாஞ்சிக்கு என்ற பேச்சும் உள்ளது.

காந்தியடிகளுடன் பெரும் வேறுபாடுகளை இந்தியன் ஹவுஸ்(1907-8 நாட்களில்) விவாதக்காலம் துவங்கி தொடர்ந்து வைத்திருந்தவர் சாவர்க்கர். சாவர்க்கர் கருத்துக்கள் மீது பெரும் விமர்சனம் காந்திக்கு இருந்தது. நேதாஜி சுபாஷ் சாவர்க்கருடன் தொடர்பில் இருந்ததாக சாவர்க்கர் நண்பர்கள் பேசிவருகிறார்கள். இந்து மகாசபா துவங்கி முஸ்லீம்கள் மற்றவர் மீதான துவேஷ அரசியலின் தந்தையாக சாவர்க்கர் கருதப்படுகிறார். ஆதாரங்களுடன் பல்வேறு ஆய்வாளர்கள் இதை நிறுவியுள்ளனர், இன்றுள்ள அரசியல் சூழல் போர்க்குணமிக்க இந்துத்வா மூலம் தொடர்ந்து மக்களை ஆள நினைக்கிறது. ஹிட்லர் தந்த அதே துயரம் என்ற அனுபவத்தை மனிதகுலம் பெறவேண்டுமா என நாம் கேட்டால் சிறுபிள்ளைத்தனம் என ஆர்னாப் போன்ற டைம்ஸ்நௌ இரைச்சல்கள் நம்மை அடக்கப் பார்க்கும். தேசத்துரோகம் என்கிற முத்திரைக்கூட குத்தப்படும்.

காந்தி கண்டிப்பாக இந்திய வாக்கு அரசியலால் மூடப்பட்டுவிடக்கூடாது, சாவர்க்கரைவிட

இளைத்துவிடக்கூடாது என்கிற அனந்தமூர்த்தி போன்ற சிந்தனையாளர்களின் கவலையுடன் நானும் தூக்கம் குறைந்து அவதிப்படுகிறேன். இதன் பொருள் எனது நண்பர்கள் சிலர் சொல்வதுபோல் படிப்பதால் பைத்தியமாவது என்பதல்ல. காந்தியின் உள்நுழைவு பாடாய்படுத்தும்..

( அக் 8 2024 பின் குறிப்பு – இதில் சொல்லப்பட்ட பழைய பி எஸ் என் எல் ஊழியர் , பின்னர் சாஸ்த்ரா பேராசிரியர் சீனிவாசன் தற்போது பிஜேபியின் தலைவராக இருக்கிறார். மதுரையில் கடந்த லோக்சபா தேர்தலில் போட்டியிட்டவர். அப்போது உரையாடிய காலங்களில் தன் அரசியல் எண்ணங்களை அவர் என்னிடம் வெளிப்படுத்தியவராக இருக்கவில்லை. இப்போது பாஜகவின் முக்கிய விவாதக்காரராக இருக்கிறார்)

(பின் குறிப்பு 2: சாவர்க்கர், ஆர் எஸ் எஸ் , பாஜக வின் வளர்ச்சி குறித்து நீள் கட்டுரைகளை எழுதியுள்ளேன். ‘என் வாசிப்பில்’ என்கிற புத்தகத்தில் அவற்றை பார்க்க முடியும்)

# ஆசிரியரின் பிற நூல்கள்

1. மார்க்சியத் தடங்கள்
2. ரோசாலக்ஸம்பர்க்
3. போராளிகளின் குரல்
4. பகவத்கீதை பன்முகக் குரல்கள்
5. Trade Justice in Telecom
6. Selected Ideas of O.P Gupta
7. ஹெகல் துவங்கி..
8. கார்க்கியின் அரசியல்வெளி
9. நவீன சிந்தனையின் இந்தியப் பன்முகங்கள்
10. காந்தியைக் கண்டுணர்தல்
11. நேருவின் மரபு
12. பெரியாரின் பொதுவுடைமை புரிதல்
13. அம்பேத்கரும் கம்யூனிசமும்
14. தோழர் காந்தி மகாத்மாவின் சோசலிச உரையாடல்
15. பாபாசாகேப் டாக்டர் அம்பேத்கர் (என் எளிய வாசிப்பில்)
16. லெனின் நான்கு கட்டுரைகள்
17. என் வாசிப்பில்...
18. சாதி எனும் பிசாசு

சிறு வெளியீடுகள்

1. ஷியாம்ஜி கிருஷ்ண வர்மா
2. சிகாகோ மேதின தியாகிகள்
3. பகுனின் போராட்ட வாழ்வும் அனார்க்கிசமும்
4. விடுதலைக்கு முன்னர் எம் என் ராய்
5. பிரடரிக் எங்கெல்ஸ் நட்பின் சிகரம்
6. நேதாஜி சுபாஷ் – கம்யூனிஸ்ட்கள் உறவும் உரசலும்
7. காந்தியும் கம்யூனிசமும்
8. வட்டமேஜை மாநாட்டில் அம்பேத்கர்
9. வரலாற்றில் சௌரி சௌரா (நூற்றாண்டின் நினைவாக)
10. தோழர் டிராட்ஸ்கி சில இடுகைகள்
11. ஆச்சார்யா கிருபளானி
12. மினு மசானி

www.pattabiwrites.in

# கணியம் அறக்கட்டளை




தொலை நோக்கு – **Vision**

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழலை உருவாக்குதல்.

பணி இலக்கு – **Mission**

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

எமது பணிகள்

- கணியம் மின்னிதழ் - kaniyam.com
- கணிப்பொறி சார்ந்த கட்டுரைகள், காணொளிகள், மின்னூல்களை இங்கு வெளியிடுகிறோம்.
- கட்டற்ற தமிழ் நூல்கள் - FreeTamilEbooks.com
- இங்கு யாவரும் எங்கும் பகிரும் வகையில், கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமையில், தமிழ் மின்னூல்களை இலவசமாக, அனைத்துக்

கருவிகளிலும் படிக்கும் வகையில் epub, mobi, A4 PDF, 6 inch PDF வடிவங்களில் வெளியிடுகிறோம்.

- தமிழுக்கான கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்கம்
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்.

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

வெளிப்படைத்தன்மை

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், முழுமையான வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும். https://github.com/KaniyamFoundation/Organization/issues இந்த இணைப்பில் செயல்களையும், https://github.com/KaniyamFoundation/Organization/wiki இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக

வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.